உ

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

(स्तोत्रभागः)

# ஸ்ரீவிக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

(ஸ்தோத்ரங்கள் - நாமாவளீ)

(முதல் பாகம்)



வெளியிடுவோர் :

**SRI VIGNESWARA VENKATESWARA TRUST**

283, T.T.K. Salai, Chennai - 600 018

உ

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

(स्तोत्रभागः)

(प्रथमो भागः)

# ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

(ஸ்தோத்ரங்கள் - நாமாவளீ)

(முதல் பாகம்)

தொகுத்தவர் :

வைத்ய S.V. ராதாகிருஷ்ண சாஸ்திரீ

ஸ்ரீரங்கம்

வெளியிடுபவர்

Sri Vighneswara Venkateswara Trust

283, T.T.K. Salai, Chennai - 600 018

2009

**Sri Vigneswarastuthimanjari**

First Part



1st Edition : 1999

2nd Edition : 2009

Compiled by :
**Vaidya S.V. Radhakrishna Sastri**
Srirangam

*Published by :*

SRI VIGNESWARA VENKATESWARA TRUST
283, T.T.K. ROAD, ALWARPET,
Chennai - 600 018 (Phone : 24992155, 24992156)
*(Near Naradagana Sabha)*

**Price :**

Lasertypeset & Printed at :
**V.K.N. Enterprises**
164, R.H. Road, Mylapore, Chennai-4
98402-17036

# ஸ்ரீ விக்நேச்வரர்

ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்தையும் நாமாவளியையும் இந்த ஸ்தோத்திரத்திற்கு ஸ்ரீ பாஸ்கரராயர் என்ற மகான் எழுதிய கத்யோதம் என்ற செய்யுளாக அமைந்த பாஷ்யத்தையொட்டி மூலத்தைச் சீரமைத்து வெளியிடுகிற வாய்ப்பு 1965ல் கிடைத்தது. ஸ்ரீ மஹாகணபதி ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரத்திற்கு மற்றொரு செய்யுள் வடிவில் அமைந்த உரை, பிரும்மாண்ட புராணத்தில் பூர்வ கண்டத்தில் 47-53 அத்தியாயங்களில் பராசரர் - வியாஸர் ஸம்வாதமாக, 651 சுலோகங்களுள்ள பகுதி ஏட்டுப் பிரதியாக குடும்ப புஸ்தக கோசத்தில் இருந்தது. இரண்டையும் ஈடு செய்து பார்த்ததில் மிகச்சில இடங்களைத் தவிர மற்ற இடங்களில் எழுத்திற் கெழுத்து ஒத்துப் போவதைக் கண்டதும், கத்யோத பாஷ்யத்தையும் இதனையும் சேர்த்து வெளியிடும் ஆசை அன்று தோன்றியதை நிறைவேற்ற இப்போது தான் வாய்ப்பு வந்தது. ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடம் ஜகத்குரு அவர்களின் ஆஜ்ஞைப்படி ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேசுவர டிரஸ்ட் விக்நேச்வரரின் ஸ்தோத்திரங்களைத் தொகுத்து வெளியிடுகிற பொறுப்பை என் மீதுள்ள ஸ்ரீ விக்நேசுவரரின் கருணையால் உந்தப்பட்டு என்னிடம் அளித்தது. எப்படி அதனை அமைப்பது ? எதைச் சேர்ப்பது என்பதில் அவ்வப்போது ஸ்ரீ கணேசரே வழிகாட்டி வந்ததால் முதலில் திட்டமிட்டதை விட இருமடங்கு விரிவடைந்துள்ளது. இந்த நூலமைப்பு இடையூறின்றி நிறைவேற அருள் புரியும்படி ஸ்ரீ காஞ்சீ காமகோடி பீடததிபர்கள் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரிய ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி ஸ்ரீ சரணர்களிடம் விண்ணப்பித்துக் கொண்டதும், எதிர்பார்த்திருப்பதை விட மிகச்சிறப்பாக அமையும் என்று அருளாசி வழங்கினார்கள். நடமாடும் தெய்வமாக அனைவரும் உணர்ந்த ஜகத்குரு ஸ்ரீ மஹா ஸ்வாமிகளின் நினைவகமாக காஞ்சீ ஏனாத்தூரில் அமைந்துள்ள ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ பன்னாட்டு நூலகத்தில் தங்கி, மூலநூல் தொகுப்பில் ஈடுபட்டதும், வற்றாத நீரூற்றாக எழுத அடங்காதவாறு தொகுப்பதற்கான விஷயங்கள் நான் முந்தி நான் முந்தி எனக் கண்கள் முன் வந்தன. அவை 5000

பக்கங்களிலும் அடங்கா. இது முக்கியம் இது சிறந்தது எனப் பாகுபடுத்த முடியாதவாறு எல்லாமே சிறப்பும் முக்கியத்துவமும் நிறைந்தவை. அன்பர்கள் பலர் கணேசர் பற்றிய நூல்கள் தந்து உதவினர். கணேசரும் தாளிலும் பேனாவிலும் மையிலும் கைகளிலும் கண்களிலும் அமர்ந்து இரவும் பகலும் எழுதினார். இந்த நூல் இரு பாகங்களாக முதலில் வெளியிடப் பெறுகின்றது. முதல் பகுதியில் வேதங்கள் புராணங்கள் மற்றும் ஆகமங்கள் கணேசரைப் பற்றித் தந்துள்ள ஸ்தோத்திரங்களும், ஜகத்குரு ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலிய மகான்கள் தாம் பெற்ற இறையருளை விளக்கித் தந்த ஸ்தோத்திரங்களும், மஹாகவிகளும் சாஸ்திரகாரர்களும் மற்றவரும் தம் தமது நூல்களின் தொடக்கத்தில் நூல் மங்களமாக நிறைவுற வேண்டிக் கொண்டு எழுதிய மங்கள சுலோகங்களும், சிறந்த வாக்கேயகாரர்களான ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஸ்ரீ தியாகராஜர் முதலானோர் எழுதிய கீதங்களும் இடம் பெறுகின்றன. இரண்டாம் பகுதியில் பகவானின் வழிபாட்டில் பெரியோர்களின் வழக்கில் இருந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்களும் திரிசதீ ஸ்தோத்திரங்களும் அஷ்டோத்தர சத நாம ஸ்தோத்திரங்களும் மற்ற நாமாவளிகளும் இடம் பெறுகின்றன.

இவற்றை தொகுத்து அச்சிற்கு அனுப்பிய பின் மிகுந்துள்ள பகுதிகளை ஆராயும் போது அவை தற்போது வெளியிட்டுள்ள அளவு மிகுந்துள்ளதும் உணர முடிந்தது. இந்த இரு பகுதிகளை வெளியிட்ட கணேசர் அதனையும் விளம்பமின்றி நிறைவுறச் செய்யக்கூடும்.

ஸ்ரீ விக்நேசுவரர் எப்போதும் போல் தொடர்ந்தும் தம் அருளிற்கு ஏற்றவராக நம்மை ஏற்கட்டும் என்று கோரி, இந்நூலை விக்நேசுவரர் அருள் பெற்றவர் முன் சமர்ப்பிக்கிறோம். இதில் உதவி புரிந்தவர் பலர். அனைவருக்கும் நன்றியும் வணக்கமும்

22, வீரேசுவரம்<br>அப்ரோச் ரோடு<br>ஸ்ரீரங்கம் 620006

S.V.ராதாக்ருஷ்ண சாஸ்திரி<br>தொகுப்பாளர்

உ

Sri Chandramouleeswaraya Namaha:
SRI SANKARA BHAGAVADPADACHARYA PARAMPARAGATHA.
His Holiness Sri Kanchi Kamakoti Peetadhipathi

# Jagadguru Sri Sankaracharya Swamigal

**Srimatam Samsthanam**

No. 1, Salai Street, Kancheepuram - 631502

Camp: காஞ்சீபுரம் Date 13.10.1998

உ

நமது அத்யந்த ப்ரிய சிஷ்யர்கள் நிர்வகிக்கிற ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேசுவரா டிரஸ்ட் மற்றும் நமது ப்ரிய சிஷ்யர் வைத்ய ராதா கிருஷ்ண சாஸ்திரியின் விஷயமாக நாராயண ஸ்மரணம் செய்யப்பெறுகிறது

பிள்ளையார் சுழியிட்டுத் தொடங்கிய பணி சிறிதும் முடக்கமின்றி இனிது நிறைவுறும் என்ற நம்பிக்கை மக்களிடையே ஆழமாக உள்ளது. நற்பணிகளைத் தொடங்குவதற்கு முன்னதாக விநாயகரை வழிபடுவர். மற்ற தேவதைகளை வழிபடவும் அவர்களது அருளை வேண்டவும் முன்னதாக விநாயகர் வழிபாடு செய்வர். நம் வீடுகளில் பஞ்சாயதன பூஜை முறையில் வேறுபாடின்றி விநாயகர், சிவபெருமான், தேவி, நாராயணர், ஸூரியன் இவர்களை வழிபடும் போது விநாயகரே முதலில் வழிபடப் பெறுகிறார். உலகப்படைப்பில் மூல ஒலியான பிரணவத்தையும் அவற்றின் வரிவடிவான நாத பிந்துக்களையும் வடிவமாகக் கொண்டவராக, பரம்பொருளாக, ஆதி தம்பதிகளின் மூத்த புதல்வராக யாவராலும் ஆலய அமைப்போ பூஜை முறையோ கொள்ளாமல் அரசமரத்தடியில் மஞ்சளிலும் மண்ணிலும் கூட, இவரை வழிபட முடிகிறது. இவரைப் பற்றி ஸ்தோத்திரங்கள் அனைத்தும் நமது ஆஜ்ஞானுஸாரம் மூன்று பாகங்களாக. வெளியிட சென்னை ஸ்ரீ விக்நேச்வர வெங்கடேசுவர டிரஸ்ட்

முன் வந்து, முதலிரு பாகங்களை வெளிக் கொணர்ந்ததைப் பார்வையிட்டு, பல அரிய விஷயங்களை. இதில் தொகுத்துள்ளதை அறிந்து மிகவும் மகிழ்ச்சியடைகிறோம். இதில் வேதம், புராணம், ஆகமம் மற்றும் இவற்றிலிருந்து விநாயகரைப் பற்றிய ஸ்தோத்திரங்கள், நாமாவளிகள், கீர்த்தனைகள் முதலியவை பல இடங்களில் தமிழ் உரையுடன் அழகிய முறையில் சேர்க்கப்பட்டுள்ளன. இவற்றைப் படித்து பூஜை முதலியவற்றில் பயன்படுத்தி ஸ்ரீ விநாயகப் பெருமானின் அருளுக்குப் பாத்திரமாகும்படி ஆசி கூறி வாழ்த்துகிறோம்

நாராயண ஸ்ம்ருதி

# இவர் பிள்ளையார்

தெய்வம் என்பது பற்றிப் பல விளக்கங்கள் உண்டு

1. வடிவம் மற்ற சிறப்பம்சங்களும் ஏதுமின்றி, தவத்தாலும் ஞானயோகத்தாலும் உணரத்தக்க நிர்குண பரம்பொருள் நிலை - பரப்ரம்ஹம்

2. பரம்பொருளே மாயையின் உந்துதலால் உலகைப் படைத்துக் கட்டுப்படுத்திப் பாதுகாத்து மறைத்து மூலப்பொருளில் ஒடுக்கித் தன்னுள் லயமடைவித்தலாகிய பல பணிகளில் ஈடுபடுகிற நிலை - ஈசன் - ஈச்வரன் ஜகத் காரணம்.

3. ஒவ்வொரு பணிக்கும் ஒரு தனித்த அதிகாரியாக அவர்களைக் கண் காணிப்பவராக சிவன் விஷ்ணு பிரும்மா என்ற மும்மூர்த்திகளாக கணேசர், சிவன், அம்பிகை, விஷ்ணு, ஆதித்தன் என ஐவராக வழிபாட்டுக் குரியவராகப் பற்பல அடையாளங்களுடன் தோன்றும் நிலை. ஸகுணர், ஜகந்நாதர் - ஜகந்நியாமகர்.

4. உலகின் தொடர்ந்த இயக்கத்திற்கு உதவுகிற தர்மத்தின் பாதுகாப்பாளராக அந்தந்தகால வரைக்கேற்ப தோன்றுகிற நிலை - அவதாரங்கள்.

5. உலகமாக மாறி உலகினுட் புகுந்து ஆட்படுத்திப் பல்வேறு கால தேசநிலைகளைப் பகுத்து அதற்கேப சர - அசுரம் என்ற பலவற்றின் மூலப்பொருளாகிய பிரகிருதி - புருஷன், அதன் பரிணாமங்களும் விகாரங்களுமான பஞ்ச பூததத்வம், உள்ளம், என்ற பல பௌதிகக் கூட்டுப் பொருள்களையும், கட்டுப் படுத்துகிற இந்திரன் அக்னி யமன் வருணன் சந்திரன் சூரியன் முதலான ஆதிதைவிக புருஷர்களாகத் தோன்றுகிற நிலை - தேவர்.

6. இவ்வாறு பலதரப்பட்ட நிலைகளை அறிவாளிக்கு உணர்த்துகிற வழிகாட்டி குரு - தாய் - தந்தை.

7. இந்நிலைகளில் ஸாதகனின் மனப்பண்புக் கேற்பப் பல வடிவங்களை ஏற்று நேரில் காட்சிதந்து மனிதனைத் தெய்வ நிலைக்கு உயர்த்துகிற பிள்ளையார், முருகன், தேவி, ராமன், க்ருஷ்ணன் முதலிய இஷ்ட தெய்வங்கள்.

ஒரே பரம்பொருள் உலகுடன் தொடர்பு கொள்ளத் தாமே விழைந்து தன்னிச்சையாக எடுத்துக் கொள்கிற பல வடிவங்களின் மூலம் முன் கூறிய ஏழு நிலைகளிலும் தன்னைக் காட்டிக் கொள்கிற வடிவம் ஸ்ரீ மஹாகணபதி. பர நிலையும், அ பர நிலையும் ஒருங்கே காட்டுபவர். பல்லாயிரக் கணக்கான ஆண்டுகள் என்ற வரையற்ற காலவரையில் பாமரர் முதல் மகாஞானியர் வரை அனைவரது உள்ளத்திலும் தெய்வமாகத் துலங்குபவர்.

வாழ்க்கையின் ஒவ்வொரு நிகழ்ச்சியும், உலகின் பரிணாமத்தின் ஒவ்வொரு இயக்கமும் சலனத்தில் தொடங்கிச் சலனத்தில் முடிவுறுகின்றன. நடுவிலும் ஒவ்வொரு நொடியிலும் ஒவ்வொரு இடத்திலும் ஒவ்வொரு நிகழ்ச்சியிலும் உணரப்பெறுவது சலனம் தான். காலத்தை விட வேகமாக மாற்ற மடைவது ஏதுமில்லை. அந்த மாற்றமும் நொடியின் நொடியில் நிகழும் சலனத்தால் தான் நேர்கிறது.

பெரும்பாலும் இச்சலனங்கள் அனிச்சையாக, நம் முயற்சி எதையும், எதிர்பாராததாக நிகழ்கின்றன. மிகச் சில சலனங்களை மட்டும் நாம் உணர்கிறோம். மற்றவை நம் உணர்விற்கு அப்பாற்பட்டவை.

சில சலனங்களைப் பற்றி முன்னதாகச் சிந்தித்துத் திட்டமிடுகிறோம். செயல் முறை வகுத்துச் செயலினுள் அடி வைக்கிறோம். செயல்படு முன் சற்றுச் சிந்தித்து நிதானம் கொள்கிறோம். இடையூறின்றி, எண்ணியது எண்ணியவாறே நடைபெறுமா என்று தயங்குகிறோம். இந்தத் தயக்கம் ஒரு நொடியில் மறைய நம்மிடம் ஒரு தாயத்து (ரக்ஷாகவசம்) உள்ளது. அது பிள்ளையார் சுழி. அது நீண்ட காலத்திய -காலவரை அறிய இயலாத காலத்திலிருந்து வந்த உள்ளப்

பதிவால் நினைவில் வருகிறது. பணி தொடங்கியதும் உள்ளுணர்வுடன் கூடிய பழக்கமாகக் கொண்டு அந்தப் பிள்ளையார் சுழியை எழுதுகிறோம். ஒரு சுழியும் ஒரு படுத்த நேர்கோடும் இணைந்த வடிவம் அது. அனிச்சையாக அதனை எழுதும் வழக்கமும் உள்ளது.

''பிள்ளையார் சுழி போட்டாச்சு! தொடங்கு ! என மனம் குதிபோட்டு ஆழ்ந்த நம்பிக்கையுடன் பணியைத் தொடங்குகிறது. அந்தச் சுழியும் நேர்க்கோடும் தான் சலனத்தின் வரி வடிவம். பொதுவாக எல்லா ஆற்றல்களையும் பிறருக்கு உணர்த்த அவற்றிற்கு வரிவடிவம் கொடுப்பதுண்டு. சலனத்தின் வரி வடிவமே சுழியும் நேர்க்கோடும் தான்.

நீர் பெருகத் தொடங்கியதும் சுழித்துச் சலிக்கத் தொடங்குகிறது. பின் நீண் கோடாக ஓடுகிறது. இந்த ஆரம்பச் சலனத்தை வரி வடிவாக்கினால் பிள்ளையார் சுழியாகும். சுழி முதல் முயற்சியின் வடிவம். நேர்க்கோடு அதன் பின் விளைவு. தடை நேருமோ என்ற தயக்கம், நேர்ப்பாதை புலப்படுகிற வரை நிதானம், சலனத்திற்குத் தடை நேரும் போது மூல நிலைக்கே திரும்புகிற வேகம், முனைவுடன் தடையைச் சீராக்கி முயல்வதே வழி என்று கண்டு, உறுதியுடன் வேகத்துடன் மீண்டும் முயன்று பார்க்க, நேர்ப்பாதை தெரிவதும் அதில் ஊக்கிய வேகத்துடன் இயக்கத்தைத் தொடர்வதுமான சலனத் தொடரைப் பிள்ளையார் சுழி உணர்த்துகிறது.

ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களில் தமஸ் தடையையும், ரஜஸ் தடைமீறுகிற உந்துதலையும், ஸத்வம் நிதானத்தையும் உறுதியையும் உணர்த்தும். இந்த முக்குணங்களின் இயல்பையும் ஆற்றலையும் கட்டுப்படுத்தும் ஈசன் பிள்ளையார் - குணேசர் - பிந்துவும் நாதமுமே சுழியும் தண்டமு(நேர்க்கோடு)மாகிப் பிள்ளையார் சுழியாயின. பிரகிருதியின் ஆற்றல் வடிவமே இந்தச் சுழி.

ஒலியே பிரகிருதியின் முதல் விரிவாக்கம். ஒலியின் முதல் விளக்கம் ஓங்காரம் எனும் பிரணவம். அதன் வரிவடிவமும்

சுழியும் தண்டமும் தான். சுழி - தண்டம், பிரணவம், பிரகிருதி, என்பதனைத்தையும் பிள்ளையாரின் உயரத்தூக்கிய துதிக்கை உணர்த்துகிறது. அதனால் அந்த துதிக்கையின் வரிவடிவமே பிரணவமும், சுழியும் தண்டமுமாக வந்தது. பிரணவ ஸ்வரூப வக்ரதுண்டம் என்றிதனை ஸ்ரீ முத்துஸ்வாமி தீக்ஷிதர் பாடுகிறார்.

மனத்தில் கொண்ட துதிக்கையின் வரிவடிவமான பிள்ளையார் சுழி பிள்ளையாரின் வடிவத்தியானமாக மாறி அவரை வணங்கி வழிபடச் செய்கிறது. எளிமையையும் எல்லையிலா மாட்சியையும் ஒருங்கே காட்டுபவரின் அண்மை அப்போது கிட்டுகிறது. பிள்ளை எனும் போது அன்புக் கையணைப்பிற்குக் கட்டுப்படுபவர். அத்துடன் 'யார்' கூடியதும் எளிதில் அணுக முடியாதவர். தந்தையார் தமையனார் என வயதில் மூத்தவரை மதிப்பதுபோல், பிள்ளையைப் பிள்ளையார் என அழைப்பதாக மட்டுமல்லாமல் வேறொரு விளக்கமும் உண்டு.

கணபதி என்று அவரை அழைப்போம். உயிரினமனைத்தும் கூட்டமாக, இயல்பால் மேலும் கீழுமாக இருப்பினும் அவருக்கு அடங்குகிற பாங்கில் அவை ஒரே தரத்திலிருப்பதால் அவை கணம். கணமாக இருப்பதற்கு அவர் ஈசர், கணம் என்பதில் யார் யார் அடங்குவர் ? மும்மூர்த்திகளும், கணேசன், சிவன், அம்பிகை, விஷ்ணு, ஆதித்தன் எனப் பஞ்சாயதன தேவர்களாகப் பல்வேறு பணிபுரிகிற கடவுளரும், அன்னமயம், பிராண மயம், மனோமயம், விஞ்ஞான மயம், ஆனந்த மயம் என்ற ஐந்து கோசங்களையும் தன் இருப்பிடமாக தனது சொத்தாக அபிமானம் கொண்டுள்ள ஆத்ம நிலைகளும் தேவர் மனிதர் நாற்கால் பிராணி, பறவை, ஊர்வன எனப்பல வகைப்பட்ட உயிரினங்களும் தனித்தனியே கணங்களே. அவற்றின் ஈசரானதால், இவரின்றி அவை தனித்தியங்காமையால் இவரே அவர்களை இயக்கி வழி நடத்துபவரானதால் கணபதி -கணநாதர் - கணேசர். நமது அன்னமயம் முதலிய கோசத்தலைவர்களுக்கு அவர் தலைவர் என்பதால்

உணரப்பெறுகிற அருகாமையுடன் மூத்தோரான சிவன் முதலானோருக்கும் தலைவரானதால். மூத்தோருக்கும் மூத்த நாயனார் ''ஜ்யேஷ்டராஜர்'', ''அப்பாலுக்கும் அப்பானவர்'' - ''பராத் பர:'' என்று உணர்ந்ததும் அவரை வெகுதூரத்தில் காட்டுகிறது. ''தத் தூரே தது அந்திகே'' என உபநிடதம் கூறும்.

முழு முதற்கடவுளாக நிறம் வடிவம் எனப்பகுத்தறிய முடியாதவாறு வாக்கிற்கும் மனத்திற்கும் கூட எட்டாதவராக நினைத்த அந்தக் கணேசப் பரம்பொருளே ஆற்றங்கரையிலும் அரசமரத்து நிழலிலும் நிழலற்ற திடலிலும் மண்ணிலும் கல்லிலும் மஞ்சள் பொடி உருண்டையிலும் எளிதில் அணுகத் தக்க பிள்ளையாராகக் காட்சி தருகிறார்.

இந்த எளிமையும் மாட்சியும் ஒருங்கே காண்கிற ஒரு தெய்வம் வேறு உண்டா? ஸ்ரீ மஹா கணபதி ஸபர்யா முறைப்படி நாள் முழுவதும் வழிபடத்தக்கவரை, ஔவைப் பாட்டி அகவலில் காட்டியபடி யோகத்தில் சித்தத்தைப் பர நிலையில் ஒடுக்கிய பின்னரே காணத் தக்கவரை, தலையில் குட்டித் தோப்புக்கர்ணம் போட்டு நான்கு முறை வலம் வருவதால், மஞ்சள்தூளை நீர்வார்த்து உருட்டி, அல்லது அச்சுவெல்லத்தை வைத்து அவரைத் தியானித்து ஒரு நொடியில் வழிபட்டு விடலாம்.

பரம்பொருளாகத் தியானத்தில் உணர்ந்தவரும் ஆடை அணிகலன்களுடன் அழகிய யானை முகத்தோனாக விக்கிரகம் கொண்டவரும், மஞ்சள்தூளில் அருவ உருவமாகக் காட்சி தருபவரும் குழந்தையாக விளையாடி வாழ வைப்பவரும் ஒருவரே.

சிவபெருமான் தன் தவத்தால் பரம்பொருளையே தன் மகனாகப் பெற்றார். அவரே கணபதி. தேவி தன் உடற்பூச்சிற்காக வைத்திருந்த மஞ்சள் உருண்டையில் பரம்பொருளின் சைதன்யத்தைப் பதித்துக் கணபதியாக்கினாள். புண்யகம் எனும் விரதமிருந்து

பரம்பொருளை நேரில் கண்டு அவரையே தன் மகனாக வேண்டி வரமாகப் பெற்றாள். இவ்வாறு புராணங்கள் கூறும். சிவபெருமானும் தேவியும் பரம்பொருளையே மகனாகப் பெற்றனர். அப்போது பிள்ளை எனத் தனக்குள் அடங்கியவராகக் கூற விரும்பாமல், பிள்ளை என்ற எண்ணத்திற்குப் பங்கமும் வராமல் பிள்ளையார் என்று அவர்களே அழைத்ததால் பிள்ளையார் என்ற பெயர் நிலைத்ததென்பர். ஜ்யேஷ்டராஜர் என வேதமே கூறும். பிள்ளையாகப் பிறந்தும் தம்மை விட இவர் மூத்தவர் எனச் சிவனே மதிக்கச் செய்ததால் ஜ்யேஷ்ட்டராஜர். சிவனும் தேவியும் ஜ்யேஷ்டராஜராக இவரை வணங்க, இவரோ சிவஸுதன், உமாஸுதன் எனத் தன்னை அறிமுகப் படுத்திக் கொள்கிறார். பண்டாஸுரனது விக்நயந்திரத்தை உடைக்க, காமேசுவரரும் காமேசுவரியும், தியானித்தபடி மஹாகணபதியாக எழுந்தருளி விக்கின யந்திரத்தைத் தூளாக்கியவர். அவர்களின் மைந்தனாகவே காட்டிக் கொள்கிறார்.

நரமுகனாக அழகனாகப் பிறந்த தேவியின் மைந்தனைச் சிவபெருமான் தன் பரசுவால் வெட்டி வீழ்த்தினார். தேவி வெகுண்டு தன் சக்தியை உலகிலிருந்து பிரித்து தன்னுள் அடக்கிக் கொண்டு விட்டாள். யானைத்தலை பொறுத்தி உயிர்த்தெழச் செய்து தேவியை மகிழ்வித்ததும், தேவர்கள் மற்றவர்களை வழிபடுமுன் ஸ்ரீகணபதியை வழிபட்டாலன்றி வழிபாடு நிறைவடையாது என்று வரம் தந்தனர். வேழ முகத்தனின் அருளால்தான் மற்ற தேவர்களின் அருள் பெற முடியும். வேழ முகத்தனின் அருள் பெற்றால் அவரிடமே தேவர் அனைவரையும் காண முடியும். இவரே அனைத்து தேவர்களுமாவார். இதனை உணர்ந்துதான் வழிபட வேண்டுமென்றில்லை. அவரை எவ்வகையிலேனும் வழிபட்டால் போதும். வழிபாடு முறைப்படி அமைவதும் அவசியமல்ல. அதே வெல்லப் பிள்ளையாருக்கு அதே வெல்லத்தைக்கிள்ளி நிவேதனம் போதும்.

'பாலும் தெளிதேனும் பாகும் பருப்புமிவை நாலும் கலந்துனக்கு நான் தருவேன்'' என்றுள் ஔவைப் பாட்டி. அவர் நாடோடி. இளங்கன்னியாயிருந்தவள். விரும்பிக் கிழவியானவள். உலகில் எந்த உரிமையையும் உடைமையையும் கொண்டாடாதவள். தான் அறிந்துணர்ந்ததை மக்களுக்கு வேறுபாடின்றி எளிய முறையில் தானே பறைச் சாற்றி முழக்க ஊர் ஊராகச் சுற்றியவர். அவளுக்கும் பசியும் தாகமுண்டு. நாடோடியின் பசியுணர்ந்த ஏழை எளியவர் தாமே விரும்பியளித்த பாலும் தேனும் பாகும் பருப்பும் அவரால் விநாயகருக்கு நிவேதனப் பொருளாகத் தரப்படுகின்றன. எனது என்ற உரிமையையும் உடைமையையும் கொண்டாடாமல், அவனளித்ததை அவனுடையதை அவனுடையதாக்குவது - அவனுடையதாகத் தெரிவிப்பதுதான் நிவேதனமாகும். இவர் ஒருவருக்குத் தான் தேங்காயைச் சிதறும்படி தரையிலடிப்பதே நிவேதனமாகிறது.

இந்தக் குழந்தைத் தெய்வத்தைப் பற்றிய பல புதிர்களை ஸ்ரீ காஞ்சி பெரியவர்கள் மஹா ஸ்வாமிகள் தமக்கே உரித்தான தெய்விக நடையில் தெய்வக்குரலில் விளக்கியுள்ளதை 'தெய்வத்தின் குரல்' இன் ஒவ்வொரு பாகத்திலும் நூற்றுக்கணக்கான பக்கங்களில் ஸ்ரீ ரா. கணபதி தொகுத்துத் தந்துள்ளதை ஆயுள் முழுதும் படித்து உணரலாம்.

பிள்ளையாராகித் தம் அருள் பரவசத்தால் நெருங்கி நம்முடன் இணைந்து நிற்பவரை பரம்பொருளானவரை எவ்வாறு துதிப்பது? ஒருவருடைய பெருமை முழுவதையும் கண்டறிந்து பாராட்டுவதே துதியாகும். கடலில் பனிக்கட்டியாலான பெருமலை ஒன்று தன் கொடிமுடியின் நுனி மட்டும் மேலே தெரியும்படி மூழ்கி நிற்கிறது. அந்த நுனியும் நீராலானதால் கடல் நீருக்கும் அதற்கும் வேற்றுமை புரியவில்லை. அதனைச் சுட்டிக் காட்டுவது போல் அமைவதே பெருமானைப் பற்றிய துதியும். அவரது பெருமைகளின் விரிவே அவரை மறைக்கிறது. அவரது பேரொளியே அவரை இருட்டிலுள்ளவராகக் காட்டுகிறது. அவரை முழுதும் அறிந்தவன் போல் புகழ முற்படுவதும் குற்றமாகலாம்.

எனினும் பணிந்தெழுவதே எம் செயலுக்கு உட்பட்டது'' என எல்லாத் துதிகளின் முத்தாய்ப்பாக அமைவதை நன்கு இந்த ஸ்தோத்திரங்களும் உணர்த்துகின்றன.

வேதம் அவரை ஜ்யேஷ்டராஜராக, பிரும்ஹண ஸ்பதியாக உணர்த்துகிறது. மூத்தோருக்கும் மூத்தவரான பரம்பொருள் அவர். வேதம், அதனை ஓதுபவர், வேத ஒலியால் நிறைவுறுகிற வேள்விகளும் அவற்றால் வழிபடப்பெறுகிற தேவர்களும், அவ்வழிபாட்டால் பெறுகிற உலக நன்மை - மேன்மைகள் வேதத்தை உலகிற்கு ஈந்த பிரும்மா. இவர்களனைவரும் பிரும்மம். என்றும் இவர்களின் பதியானதால் விநாயகர் ப்ரம்ஹணஸ்பதியாகிறார். பல்வேறு கணங்களும் ஒன்று கூடிக் கணங்களாகின்றன. தேவரினத்தில் கணத்தில் உட்பிரிவாக தேவர், கந்தர்வர்,, ஸித்தர், ஸாத்யர், வஸு, ருத்ரர், ஆதித்யர், விச்வேதேவர், ஆபாஸ்வரர், துஷிதர் என்றவாறு பல கணங்கள் உண்டு. இந்த கணங்களின் கணத்திற்கு தலைவர். ''கணாநாம் கணபதிம்'' என்றே இவரை முதலில் வேதம் அறிமுகப்படுத்துகிறது. மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதபடி விரிந்து கிடக்கின்ற அவரது படைப்புகளில் ஒன்றான இவ்வுலகத்தின் ஆழத்தையும் பரப்பையும் உட்கிடக்கையையும் உணர்ந்து அவற்றை அவர் படைத்த எழுத்து வடிவில் தருபவர் கவியாவர். இவரோ ''கவீநாம் கவிம்'' ''கவிகளுக்கும் கவி, இணையற்ற புகழ் படைத்தவர்'' உபமச்வரவஸ் தமம் ''ப்ரம்ஹணாம் ப்ரம்ஹணஸ்பதிம்''. ருக்வேதமும் யஜுர்வேதமும் ப்ரம்ஹணஸ்பதி என்றே இவரைக் குறிப்பிடுகின்றன. அதர்வ வேதம் நமஸ்தே கணபதயே என்றே தொடங்குகிறது. கணபதி, ஏகதந்தர், வக்ரதுண்டர், தந்தீ எனப் பெயர்களை வேதம் அறிமுகப்படுத்துகிறது.

வேதம் கூறிய பெருமைகளையே கணேசப் பெருமானின் அவதாரங்களான வக்ரதுண்டர், கஜாநநர், மஹோதரர், ஏகதந்தர் முதலானவற்றில் கண்ட கணகர், முத்கலர். கசியபர், பார்கவர், வஸிஷ்டர் முதலான முனிவர்கள் மந்திரவடிவில் அவரைக் கண்டு வழிபட்டதை புராணங்கள் கூறுகின்றன.

அந்த அவதாரங்களில் பகவான் காட்டிய லீலைகளைத் தம்மைக் காக்க வந்த பரமனின் அருட் செயல்களாகப் பாவித்துத் தேவர் முதலானோர் துதி வடிவில் வெளியிட்டுள்ளனர். இவையனைத்தும் முன் யுகங்களில் நிகழ்ந்தவை.

கலியுகத்தில் பகவானை வழிபட்ட ஸ்ரீ சங்கர பகவத் பாதர் முதலானோரும் செவிக்கினிய மொழி வடிவில் துதிகளாக அவரது பெருமைகளைத் தொகுத்துத் தந்துள்ளனர். இவையனைத்தையும் நம் வரை கிட்டும்படி சுவடிகளில் எழுதிப் பாதுகாத்துத் தந்த நம் முன்னோரும் பகவானின் அருள் பெற்றவரே. முன்னோரின் உடமைப் பொருளாக இருந்ததைக் கடும் முயற்சியெடுத்துப் பாதுகாத்தும் நாம் வேண்டும்போது நமது உடமையாக்கிக் கொள்ள வாய்ப்பைப் பெருமனத்துடன் நல்கிற ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸரஸ்வதீ பன்னாட்டு நூலகம் முதலியவையும் பகவானின் அருளுள்ளத்தை நமக்கு உணர்த்துபவரே. இவற்றைத் தக்க விளக்கங்களுடன் நம்மையடுத்து வருகிற சந்ததியினருக்குத் தருவது நமக்குள்ள பெரும் பொறுப்பு. அது நிறைவுற அவன் தாள் பணிவோம். இவ்வரிய தெய்வ உணர்வு புகட்டுகிற நூல்களை எழுதிப் பாதுகாத்து நமக்கு விளங்கும்படி போதித்து நம் கைகளில் ஒப்படைத்த நம் முன்னோர்களுக்குச் சிரம் தாழ்த்தி இதனையே காணிக்கையாக சமர்ப்பிப்போம்.

# கணேசரின் அடையாளங்கள்

பிரணவமும் பிள்ளையார் சுழியும் அவரது துதிக்கை தூக்கிய திருமுகத்தின் அடையாளம். பிரணவம் வலமாகச் சுழித்த துதிக்கையுடன் அமர்ந்துள்ள திருக்கோலத்தைத் காட்டுமென்பர். அவரது திருக்கைகளில் ஏந்திய ஆயுதங்களும் மற்றதும் தேவதைகள் அனைவரின் வடிவத்தில் அவர் இருப்பதைக் காட்டும். அவருக்கே உரித்தான தனித்த அடையாளங்கள் - தன் தந்தம், கொழுக்கட்டை, தன் துதிக்கையில் ஏந்திய அமுத ரத்ன கலசம் முதலியவை. பெரும்பாலான தியான வடிவங்களில் பாசம், அங்குசம், தந்தம் கொழுக்கட்டை, பரசு, அபயமுத்திரை, வரத முத்திரை, மற்றும் மாதுளை காணப்பெறுகின்றன. இவ்வாறு கைகளில் ஏந்தியவை ஸ்ரீ கணேசரின் சக்திச் சிறப்புகளைத் தெரிவிக்கின்றன.

ஸ்ரீகணேசர் பரம்பொருளானவர். உலகம், உலகைக் காப்பவர், உலகின் உருமாற்றுபவர், படைப்பு தானியங்கியாகித் தொடர காம (இச்சா) சக்தி, உலகின் ஆதார சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என்ற பல சக்திகள் பெற்றவராகப் பல தோற்றங்கள் பெறுகிறார். இவரிடமிருந்தே அந்த சக்திகளை இயல்பாகக் கொண்டு பஞ்சகிருத்யங்களை ஆற்றுகிற தேவர்கள் தோன்றினர் என்பர். இவற்றில் முக்கியமானவர்கள் கணேசர், சிவன், உமாதேவி, நாராயணன், லக்ஷ்மி, பிரும்மா, ஸரஸ்வதி, வராஹர், பூமி, மந்மதன், ரதி, ஸ்கந்தர் என்பவர். அத்தோற்றங்களில் அவர்கள் ஏந்திய ஆயுதம் முதலியவை மூல மூர்த்தியான ஸ்ரீ மஹாகணபதியிடமும் அவருடைய மற்ற மூர்த்திகளிலும் காணலாம். உதாரணமாக -கணேசரின். தந்தமும் மோதகமும், கணேச சக்தியின் மாதுளை, சிவனின் சூலமும், பரசுவும், உமாவின் பாசமும் அங்குசமும், நாராயணனின் சங்கமும் சக்கிரமும், லக்ஷ்மியின் தாமரை, வராஹரின் கதை, பூமி தேவியின் நெற்கதிர், மன்மதனின் கரும்பு வில்லும் புஷ்ப பாணமும், ரதியின் அல்லிப்பூ, பிரம்மாவின் கமண்டலு, ஸரஸ்வதியின் அக்ஷமாலையும் புத்தகமும் வீணையும், ஸ்கந்தரின் சக்தியும் தண்டமும்.

இவற்றைத்தாங்கி எல்லா தேவதைகளாகவும் திகழ்பவர் ஸ்ரீ கணேசரே. இவரை வழிபட எல்லா தேவதைகளின் அருள் எளிதில் பெறலாம். இவர் அருளை பெறாது மற்றவர் அருள்பெறுவது எளிதல்ல என்பதும் துலங்கும்.

சிவபெருமானும் பார்வதியும் இவரது முதல் தோற்றத்திற்குக் காரணமானவர். அவர்களைப் போல் இவர் தேவியை மடியின் இடது பாகத்தில் கொள்வார். ஸ்கந்தனைப் போல் இரு தேவியரை இரு புறங்களிலும் இணைத்திருப்பார். நாராயணன் இவரது தாய்மாமன் என்பர். யானைத்தலை, மனித உடல் என்பது நாராயணனை (நரசிம்மனை ஹயக்ரீவனை) ஒட்டியது என்று கவிகள் கூறுவர். தந்தையும் மாமனையும் நினைவிற் கொண்டு கழுத்தின் மேல் ஆண் யானை, கழுத்தின் கீழ் பெண்ணாக மற்றொரு விசித்திர தோற்றம் ஸ்ரீவித்யா கணபதி எனக் கொள்வது உண்டு.

யானையை அடக்க மாவுத்தன் துறட்டியும் கயிறும் சங்கிலியும் கையில் வைத்திருப்பான். இந்த யானை தன் மனிதக் கைகளில் துறட்டியும் பாசமும் சங்கிலியும் வைத்துள்ளது. இந்த யானை மற்றவர்களை அடக்கும். தான் அடங்காதது. கட்டில்லாமல் துறட்டியின் குத்தில்லாமல் தானே அன்பிற்கு அடங்கித் துதிக்கை குழைய வரும்.

பாசம், (நாகபாசமும் உண்டு) அங்குசம், தந்தம், வில் (கரும்பு வில்லுமுண்டு) அம்பு (புஷ்ப பாணமும் உண்டு) பரசு (கோடரி - மழு) கட்வாங்கம், குந்தம், சூலம், சக்கிரம், சங்கம், கட்கம், சங்கிலி, வேதாளம், சக்தி, முத்கரம், கதை என்ற ஆயுதங்கள், பூங்கொத்து, கற்பகக் கொடிப் பூங்கொத்து, அல்லி, தாமரைப்பூ, மாம்பூ என்ற பூவகை; தேங்காய், மாதுளம்பழம், மாம்பழம், வாழைப்பழம், பலாப்பழம், விளாம்பழம், நாவல்பழம் என்ற இனிய பழ வகை; கரும்பு; கிண்ணம் நிறைந்த தேன்; கொழுக்கட்டை, எள்ளுக் கொழுக்கட்டை, அப்பம், லட்டு, வெல்லப் பாயஸம்; என்ற இனிய தின்பண்டவகை, அருளைக் காட்டுகிற அபயமுத்திரை, வரத முத்திரை, வெற்றிக்கான கொடி, பற்றற்ற நிலைக்கான கமண்டலு, யோக நிலைக்கான தண்டம், ஞான நிலைக்கான

ஜபமாலை, புத்தகம், கலையறிவிற்கான வீணை, தானிய நிறைவிற்கான நெற்கதிர், விரும்பியதைத் தருகிற கற்பகக் கொடி, தன நிறைவிற்கான ரத்தின கலசம் தங்க கலசம், அமுத நிலை தருகிற அமுத கலசம்; ஞான உபதேசம் தரக்கிளி, அரச வாழ்வு தரச் சாமரம், மன அமைதி தரச் சந்த்ர கலை, ஸம்ஹார நிலைகாட்ட வெட்டிய தலை, இவற்றைப் பல்வேறு தியான வடிவங்களில் காணலாம்.

பாசம் என்ற கயிறு - இரு முனைகளும் பிணைக்கப் படாமலிருக்கும். ஒரு முனையைப் பிடித்துக் கொண்டு மறுமுனையை எதிரியைநோக்கி எறிய, அது எதிரியைச் சுற்றி வளைத்து எறிந்த வேகத்தில் அம்முனை எறிபவனின் கைக்கு வந்து சேரும். ஆசையை அடக்கவும் இதுபயன் படுத்தப்பெறும்.

அங்குசம் எனும் துறட்டி - இதன் கூரிய முனை வளைந்த கொக்கி போல் சதையில் மாட்டி இழுக்கக் கடும் வேதனை தரும். (அங்குசத்திற்கு ஸ்ருணி என்ற பெயருண்டு. ஸ்ருணி -பூமாலை எனக் கொள்பவருண்டு). கோபமும் ஆற்றமையு மடங்க இது பயன்படுத்தப்பெறும்.

தந்தம் - கணேசரின் இடது தந்தம் பரசுராமரின் கோடரியால் வீழ்த்தப்பட்டது. பரசுராமர் சிவபெருமானிடம் அஸ்திரவித்யையைக் கற்றார். சிவபெருமானின் பரசு (கோடரி)வையும் பெற்றார். தந்தையின் பரசுவிற்குத் தந்த மதிப்பு, அந்த தந்தத்தையே அணியாக ஏற்கச் செய்தது. வலதுதந்தம் கஜாஸுரனை வெல்லப் பயன்பட்டது. பின்னர் பாரதம் எழுத் எழுதுகோலாகியது.

பரசு - குடாரம் அடி சிறுத்து நுனி விசிறி போல் விரிந்து மிகக் கூரான மழு என்றும் இதனைக் கூறுவர். இது செதுக்கி மாய்க்கும். நீள் சதுரமாக வாய்ப்பக்கம் வளைந்து நிற்பது கோடரி. இது பிளந்து மாய்க்கும்.

வில்லும் பாணமும் - கரும்பே வில்லாக, பூவே பாணமாகக் கொண்ட மூர்த்திகள் சில. இவற்றின் தாக்கம் மனத்தளவில். மூங்கிலாலான வில்லும் உலோக முனை கொண்ட பாணமும்

எதிரியைத் தாக்க. தாமரை, செங்கழு நீர், செவ்வல்லி, செவ்வாம்பல், மாம்பூ இந்த ஐந்து பூக்களாலான பாணங்கள் பஞ்ச பூதங்களின் மிக ஸூக்ஷ்ம சக்தி (தன் மாத்திர) நிலைகளான சப்தம் ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் இவற்றின் ஆற்றலுள்ளவை. முறையே மாரணம் (மாய்ப்பது) சோஷணம் (வற்ற வைப்பது) மோஹனம் (மயக்குவது) ரோசனம் (சுவையூட்டுவது - மனத்தை ஈர்ப்பது) ஹர்ஷணம் (மகிழ்விப்பது) என்ற சிறந்த ஆற்றல் படைத்தவை. வில் கொம்பாலானதாகவும் உண்டு. சார்ங்கீ (நா 253) என்று ஸஹஸ்ர நாம ஸ்தோத்திரம்.

கட்கம் - வாள் அல்லது எறிகத்தி. வாளேந்தியகையே த்ஸரு என்ற கேடயமும் ஏந்துவதுண்டு.

கட்வாங்கம் - குண்டாந்தடி. முழங்காலுக்குக் கீழுள்ள கணைக்கால் - கட்வாங்கம். கட்டிலின் மேல்பருத்து அடிசிறுத்து அடியின் நுனி உருண்டு காண்கிற கால் (கட்வா - கட்டில்) கட்வாங்கம். கட்டில் கால் போல் கணைக்கால் போல் நுனி பருத்து அடி சிறுத்த குண்டாந்தடி. பிச்சுவாக்கத்தி என்பர்.

சக்தி - கூரிய வேல், ஒரு இலையுள்ளது. வேலின் அடியும் நுனியும் கூருனவை. மேலும் கீழும் மூன்றுமுனைகள் உள்ள சூலம் போன்றது எனபர்.

சூலம் - மூன்று இலைகள் கொண்டது. இருவெளி முனைகளும் வெளிப்புறம் வளைந்து மிருக்கும்.

சக்கிரமும் சங்கமும் - சங்கு ஊதிக்கிளப்பிய பேரோலியே இதயத்தைப் பிளக்கும். சங்கிற்கு அறியாமையைப் போக்கும் ஒலியும் உண்டு. உடலின் மேல் அதனால் வருட தன் மழுமழுப்பால் இழந்த உணர்வை மீட்கும். சக்கிரம் அவயங்களைச் சிதைக்கும்.

முத்கரம் - சம்மட்டி

குந்தம் - குத்தீட்டி. குந்தாலி என்றதரையைப் பிளக்கிற கருவ என்பர்.

**வேதாளம்** - *பயங்கர உருவுள்ள பேய் - இதன் பயங்கரத் தோற்றம் மாய்க்கும்*

**அபய முத்திரை** - **வரத முத்திரை**. *'நாமிருக்க பயமேன்'* என்றுணர்த்துகிற விரல்கள் மேல் நோக்கிய முன் கரம் **அபயம்** தருகிறது. விரும்பியதை வாரி வழங்குகிற விரல்கள் கீழ் நோக்கி விரிந்த கை- **வரதம்**.

**ஜபமாலை** *கல்வி, மெய்ஞ்ஞானம், மந்திர சித்தி, நினைவாற்றலுக்கான பயிற்சி* இவற்றையும், **புத்தகம்** *நூன் முகமான கல்வியையும்,* **வீணை** *கலைப்பயிற்சியையும்* **கமண்டலு** *துறவையும் ஞானத் தேடலையும்* **தண்டம்** *மனவடக்கத்தையும் பிரும்ம சரியத்தையும் தன்னைத் தானே தாங்குவதையும் உணர்த்தும். தண்டம் தன்னடக்கத்தைக் காட்டுவது போல் பிறரை அடக்கத் தடியாகவும் பயன்படும்.*

*கையில் கலசங்கள் மூன்று விதமாக அமைந்துள்ளன. பெரும்பாலும் கலசத்தைத் தன் துதிக்கையால் தாங்குகிறார். மற்றதை மனிதக்கையால் தாங்குமவர், இதனை யானைக் கையால் தாங்குகிறார். பக்தனின் பால் குழைந்து எட்ட நிற்கிற பக்தனின் அருகாமை வரை நீள்கிற கை அது.*

*அதில் ஏந்தியது ரத்தினத்தாலான ரத்தினங்கள் நிரம்பிய ரத்ந* **கலசம்.** *ரத்தினங்களைச் சொரிவது, உயர்ந்த செல்வம் தரவல்லது.* **அமுதம்** *நிரம்பியது* **அம்ருத கலசம்.** *நிலைத்த வாழ்வைத் தருவது. மற்றொன்று ஸ்வர்ண கலசம். தங்கத்தாலானது. நல்ல நிறமுள்ளது - ஸுவர்ணம். நல்ல எழுத்தொலி கொண்டதும் - ஸுவர்ணம் தான். (ஸுவர்ணம் - ஸ்வர்ணம் - அர்ணம் வர்ணம் - நிறம், எழுத்து) மந்திர சக்தியும் பேரொளியும் கொண்ட கலசமிது.*

**சுகம்** - **கிளி** இறைவனிடமிருந்து பேரறிவைப் பெற்று இறையறிவு போதிக்கிற குருவே கிளி. *மீனாக்ஷி சியாமளா முதலிய அறிவு தேவதைகளின் கைகளில் இது அமர்ந்திருக்கும்.*

*இனிய பழங்களும் இனிய பூக்களும் இனிய தின்பண்டங்களும் பக்தனால் அளிக்கப் பெற்றவை. அவற்றை*

உவகையுடன் ஏற்றுத் தான் ஏற்றதைப் பெருமையுடன் வெளிக்காட்டுகிற அன்புடன், அவற்றைத் தன் அருளாலும் கருணையாலும் மேலும் சிறந்த தாக்கிப் பக்தருக்குத் திருப்பித் தர ஆயத்தப்படுத்தப் பெற்றகைகள்.

இறைவனது அரிய வாகனமான மூஞ்சூறும் பெருமெலி (பெருச்சாளி)யும் இயல்பால் பிறர் வைத்துள்ள பொருளை அவர் அறிந்தோ அறியாமலோ பறித்துண்பவை. சைத்திரிகனின் தூரிகை அதைப் பேராசையுடன் அந்த இனிய பண்டங்களைப் பறிக்கத் துடிப்பதாகவோ தனியே அமர்ந்து இறைவனின் எதிரிலேயே கொரிப்பதாகவோ சித்தரித்திருக்கும். ஆனால் ஒரு பக்தனின் கண்களில் அது வேறு விதமாகக் காட்சி தருகிறது.

सत्कादौ साभिलाषं स्ववहनविवशं वीतपाशाङ्कुशाभ्यां
पाणिभ्यामूरुमध्ये निहितमभिमृशन् दक्षपाण्यङ्गुलीभिः ।
किं भक्ष्ये तेऽभिलाषः? किमु मयि? निभृतं पश्य मां इत्युदारं
पृच्छन् मूकेऽथ मूषे, सदयहृदवतात् बालवेतण्डवक्त्रः ॥

''எலிக்கு எதிரிலுள்ள சத்துமா முதலிய தனக்கு வைத்த நிவேதனப் பொருளில் ஆர்வமுள்ளது. தொடர்ந்து தன்னைத் தாங்கி அது களைத்து விட்டது.'' என்றுணர்ந்த பால கணேசர், அதனை விட்டிறங்கினார். பேராசை பிடித்த ஜீவர்களின் மொத்த உருவான அதனை அடக்கத்தான் வைத்திருந்த பாசத்தையும் துறட்டியையும் அப்பால் வைத்தார். 'மனத்தில் கருணை வெள்ளம் பாய்ந்தது. அதனைத் தன் பால் இழுத்து அதன் தலையைத் தன் தொடையில் வைத்து வலது கை விரல்களால் வருடிக் கோதி விட்டார். அதன் காதருகில் குனிந்து அதனைக் கேட்டார். ''இந்த தின்பண்டங்களை விரும்புகிறாயா? என்னை விரும்புகிறாயா? என்னை நிமிர்ந்து உற்றுப்பார்.'' என அதன் முகம் நிமிர்த்தித் தன்னைக் காட்டினார். அதன் கண்களில் பரவசமும் ஆர்வமும் அமைதியும் கொப்புளிக்க அது பகவானுக்கு விடையளிக்காமல் ஊமையானது. அதனை அந்நிலையில் காண்கிற இறைவனும் ஆநந்தம் ததும்ப அதனைப் பார்த்துக் கொண்டேயிருக்கிறார். அங்கு வாஹனமுமில்லை ; வாஹனமேறுபவருமில்லை. ஆநந்தமே பாலகணேச வடிவான பரம்பொருளே இருந்தது''.

இறைவனுக்கு இன்பண்டங்களை நிவேதனமாக்கிய பக்தன் அவற்றின் இனிமையே உருவான பேரானந்த வடிவினைக் காண்கிறான். உலகம் மறைகிறது. பகவானுக்கு அளித்ததும் பகவானின் கையில், பகவான் தர விழைந்ததும் பகவானின் கையில். தருபவருமில்லை, பெறுபவருமில்லை.

பெருச்சாளியாயிருந்த நாமும் நமது உடைமைகளும் அவருடையதாக, மீதமுள்ள நாமே நாமாக அவராக உணர்கிற நிலை அருள்பவர் விநாயகப் பெருமானே.

**தியான வடிவங்களின் கைகளில்** —பால கணபதி முதலான தியான வடிவங்கள் ''மஹா கணபதியின் தியான மூர்த்திகள்'' என்ற தலைப்பில் (ப. 164) தரப்பட்டுள்ளன. அவர்கள் கைகளில் ஏந்திய ஆயுதம், பூ, பழம், தின்பண்டங்கள், காட்டுகிற குறிகள் (முத்திரைகள்) மனைவி, நிறம், முகம் இவற்றால் வெவ்வேறு வடிவங்களின் அடையாளம் காணலாம்.

பாசம் ஏந்தியவர்கள் - உச்சிஷ்டர், உத்தண்டர், வக்ரதுண்டர், துர்கா கணபதி, ஸங்கட ஹர கணபதி, தருணர், சக்தி கணபதி, விக்கினர், விக்கினராஜர், க்ஷிப்ரர், ஸ்வர்ணாகர்ஷணர், ஹேரம்பர், லக்ஷ்மீகணபதி, மஹாகணபதி, நிருத்தர், ஏகாக்ஷரர், வரர், த்ர்யக்ஷரர், ஹரித்ரா கணபதி, ஸ்ரீ வித்யா கணபதி, புஷ்டி கணபதி, த்விமுகர், த்ரிமுகர், யோக கணபதி வீர கணபதி.

அங்குசமேந்தியவர் - வக்ரதுண்டர், தருணர், வீரர், சக்தி கணபதி, விக்க்நர், விக்க்நராஜர், க்ஷிப்ரர், ஹேரம்பர், லக்ஷ்மீ கணபதி, நிருத்தர், ஸ்வர்ணாகர்ஷணர், உச்சிஷ்டர், ஏகாக்ஷரர், வரர், த்ர்யக்ஷரர், ஹரித்ரா கணபதி, புஷ்டிகணபதி, ருணமோசநர், த்விமுகர், த்ரிமுகர், துர்கா கணபதி, ஸங்கட ஹரணர்.

தந்தமேந்தியவர் - தருணர், விக்க்நர், க்ஷிப்ரர், ஹேரம்பர், மஹா கணபதி, விக்க்நராஜர், நிருத்தர், ஊர்த்த்வர், த்ர்யக்ஷரர், சக்திகணபதி, புஷ்டிகணபதி, லக்ஷ்மீகணபதி, ஹரித்ரா கணபதி, ஏகதந்தர், உத்தண்டர், ருணமோசநர், டுண்டி, த்விமுகர், துர்காகணபதி, உச்சிஷ்டர், ஸ்ரீ வித்யா கணபதி.

பரசு - குடாரம் - வீரர், விக்க்நர், ஹேரம்பர், நிருத்தர், ஏகதந்தர், டுண்டி, ஸித்தி கணபதி.

கட்வாங்கம் - வீரர்

குந்தம் - வீரர்

சூலம் - வீரர், மஹாகணபதி, ஹேரம்பர், ஸ்ரீ வித்யாகணபதி.

வில் - விக்க்நர், மஹாகணபதி, ஊர்த்தவர், உத்தண்டர், ஹரித்ரா கணபதி, ஸ்ரீ வித்யா கணபதி, வீரர், துர்கா கணபதி, உச்சிஷ்டர்.

அம்பு - விக்க்நர், உத்தண்டர், ஹரித்ரா கணபதி, வீரர், துர்கர், உச்சிஷ்டர்

சக்கிரம் - வீரர், விக்க்நர், மஹாகணபதி, உத்தண்டர், லக்ஷ்மீகணபதி, ஸ்ரீ வித்யா கணபதி, ஸிம்ஹ கணபதி.

சங்கம் - விக்க்நர், லக்ஷ்மீ கணபதி.

கட்கம் - வீரர், லக்ஷ்மீ கணபதி, ஸிம்ஹர்

வேதாளம் - வீரர்

சக்தி - வீரர்

முத்கரம் - வீரர், ஹேரம்பர்

கதை - வீரர், மஹாகணபதி, உத்தண்டர், ஊர்த்வர், விக்க்நர், ஸ்ரீ வித்யா கணபதி.

துவஜம் - வீரர்

தண்டம் - யோக கணபதி, த்விஜகணபதி

அபய முத்திரை - வக்ரதுண்டர், ஹேரம்பர், த்ரிமுகர், ஸிம்ஹர், சக்தி கணபதி, புஷ்டிகணபதி, லக்ஷ்மீகணபதி, ஸ்வர்ணா கர்ஷணர்.

வரத முத்திரை - வக்ரதுண்டர், ஹேரம்பர், லக்ஷ்மீ கணபதி, ஏகாக்ஷரர், த்ரிமுகர், ஸிம்ஹர், ஸங்கட ஹரணர், சக்தி கணபதி, ஸ்வர்ணா கர்ஷண கணபதி.

கமண்டலு - த்விஜர்

ஜபமாலை - த்விஜர், உச்சிஷ்டர், ஹேரம்பர், ஏகதந்தர், டுண்டி, த்ரிமுகர், யோகர், துர்கர், சக்திகணபதி. உச்சிஷ்டர்

புஸ்தகர் - த்விஜகணபதி

வீணா - ஸிம்ஹர், உச்சிஷ்டர்.

ரத்னகலசம் - *க்ஷிப்ரர், லக்ஷ்மீ கணபதி, வரர், மஹா கணபதி, உத்தண்டர், டுண்டி, த்விமுகர், ஸிம்ஹர், உச்சிஷ்டர், லக்ஷ்மீ கணபதி, ஸ்வர்ணாகர்ஷணர், ஹரித்ரா கணபதி, ஸ்ரீ வித்யா கணபதி.*

அமுத கலசம் *த்ரிமுகர், ஸ்ரீ வித்யா கணபதி*

ஸ்வர்ணகலசம் - *லக்ஷ்மீ கணபதி*

சங்கிலி - *ஸ்ரீ வித்யா கணபதி*

சிரஸ் - *ஹேரம்பர்*

கற்பகக் கொடி - *க்ஷிப்ரர், ஹேரம்பர், ஸிம்ஹர், துர்கா கணபதி, லக்ஷ்மீ கணபதி.*

பூங்கொத்து - *ஸித்தி கணபதி, ஸிம்ஹ கணபதி.*

உத்பலம் - அல்லி - *உச்சிஷ்டர், மஹாகணபதி, ஸ்ரீ வித்யா கணபதி, ஊர்த்வ கணபதி, உத்தண்டர்*

தாமரை - *மஹாகணபதி, ஊர்த்வ கணபதி, க்ஷிப்ரர், உத்தண்டர், ஸிம்ஹர், ஹரித்ரா கணபதி, ஹேரம்பர், உச்சிஷ்டர் ஸ்ரீ வித்யா கணபதி, லக்ஷ்மி.*

நெற்கதிர் - *தருணர், உச்சிஷ்டர், விக்னர், மஹா கணபதி, ஹரித்ரா கணபதி, ஸ்ரீ வித்யா கணபதி, ஊர்த்வ கணபதி உத்தண்டர்.*

கிளி - *லக்ஷ்மீ கணபதி*

தேன்கிண்ணம் - *(மதுகபாலம்)* வரர்

சந்திர கண்டம் - *சக்தி கணபதி*

வாழைப்பழம் - *பாலர், பக்தர்,*

மாம்பழம் *பாலர், பக்தர், ஸித்தி கணபதி, விக்நராஜர், த்ர்யக்ஷரர், ஹேரம்பர்.*

தேங்காய் - *பக்தர்*

மாதுளை - *உச்சிஷ்டர், லக்ஷ்மீ கணபதி, மஹா கணபதி, ஏகாக்ஷர கணபதி, க்ஷிப்ரர், உத்தண்டர், ஸ்ரீ வித்யா கணபதி.*

பலாப்பழம் - *பாலர்*

கரும்பு - *பாலர், தருணர், ஸித்தி கணபதி, யோக கணபதி*

விளாம்பழம் - *தருணர்*

நாகப்பழம் - *தருணர், ருணமோசநர், துர்கா கணபதி.*

லட்டு - *ஏகதந்தர்*

அபூபம் - *தருணர், நிருத்தர்*

மோதகம் - கொழுக்கட்டை - *பாலர், உச்சிஷ்டர், ஹேரம்பர், த்ர்யக்ஷரர், சக்தி கணபதி, ஹரித்ரா கணபதி, உச்சிஷ்ட கணபதி,*

திலமோதகம் - *ஸித்தி கணபதி*

குடபாயஸம் - *பக்தர், ஸங்கடஹரணர்*

பகவானின் மேனிவண்ணம் — *ஸ்ரீ கணேசரின் தியான வடிவங்களை மனத்தில் பதித்துக் கொள்ள மற்றொரு அடையாளம்* - மேனிநிறம்.

*உச்சிஷ்டர் உத்தண்டர், ருணமோசனர், ஏகாக்ஷரர், க்ஷிப்ரர், தருணர், த்ரிமுகர், மஹாகணபதி, வரர், விக்க்நர், வீரர்,* இவர்களின் மேனிநிறம் சிகப்பு.

*ஊர்த்த்வர், த்ர்யக்ஷர், துர்கா கணபதி லக்ஷ்மீ கணபதி, ஸித்தி கணபதி, ஸ்வர்ணா கர்ஷணர்* இவர்களது மேனி தங்க நிறம் கொண்டது. ருணமோசகர் ஸ்படிக நிறம் கொண்டவர். சிந்தூர நிறம் கொண்ட வராகத்தியானிப்பது உண்டு. ஏகதந்தர் கருநிறம் கொண்டவர். புகை நிறம் கொணடவர் தூம கேது. பச்சை கலந்த நீல நிறம் கொண்டவர் த்விமுகர். மஞ்சள் நிறம் கொண்டது ஹேரம்பரும் (ஒரு முகம்,) ஹரித்ரா கனபதியும். வெள்ளை நிறத்தில் சக்தி கணபதி, லக்ஷ்மீ கணபதி, விக்நர், ஹேரம்பர். *பால சூர்யனுக்கொப்ப அருணர் - வக்ரதுண்டர், பாலர், மஹாகணபதி, யோக கணபதி, சக்தி கணபதி, ஹேரம்பர். ஸங்கட ஹரணர்:*

சந்திரகிரணம் போன்ற வெண்ணிறம் கொண்டவர் த்விஜர், *பக்தர், ஸிம்ஹ கணபதி,* நாம் விக்னம் நீங்க தலையில் குட்டிக் கொண்டு வேண்டுகிற விநாயகரும் சந்திர வண்ணம் *(பௌளிவர்ணம்)* கொண்டவரே

**பகவானின் மனைவி** — மற்றொரு அடையாளம் மனைவி என்ற பாவனையில் அமைந்த சக்தி. உச்சிஷ்டர் (நீல ஸரஸ்வதி) ஊர்த்வர், உத்தண்டர், புஷ்டிபதி (புஷ்டி) மஹா கணபதி (வல்லபா) லக்ஷ்மீ கணபதி (லக்ஷ்மீ) வர கணபதி (புஷ்டி) சக்தி கணபதி (சக்தி) ஸங்கட ஹரணர் (பாலா) லக்ஷ்மீ கணபதி (ஸ்ரீ ஸம்ருத்தி என இருவர்) வக்ர துண்டர் (ஸித்தி புத்தி) என்ற இவர்கள்த் தேவிகளோடு காட்சி தருகின்றனர்.

பிள்ளையார் பிரும்மசாரி என்றும் முருகன் இருமனைவியர் கொண்டவர் என்றும் பரவலாக ஒரு பாவனை உண்டு. தென் பாரதத்தில் இது அதிகம். வட பாரதத்தில் பிள்ளையார் ஒன்றலது இரண்டு மனைவி கொண்டவர், முருகன் பிரும்மசாரி என்ற எண்ணம் உண்டு. வள்ளியை இளையவன் மணக்க உதவிய மூத்தவர் பிரும்மசாரி என்று தென்தேசத்துக் கதை. தேவாலயங்களில் வல்லபா கணபதி பல இடங்களில் உள்ளார். திருவானைக்காவில் இவரது உத்ஸவ மூர்த்தியே பஞ்சமூர்த்தி உலாவில் புறப்பாட்டில் எழுந்தருளுகிறார். சித்தி - புத்தி கணபதி, நீல ஸரஸ்வதியுடன் கூடிய உச்சிஷ்ட கணபதி இவர்களும் உண்டு. பகவானின் பத்தினிகளாக வல்லபை, மகாலக்ஷ்மி, சக்தி, ருத்தி, ஸித்தி, புத்தி, நீல ஸரஸ்வதி (உச்சிஷ்ட சாண்டாளீ) புஷ்டி,துஷ்டி, என்ற பலர் குறிப்பிடப் பெறுகின்றனர். பிரும்மா தன் புதல்விகள் இருவரை இவருக்குத் திருமணம் செய்வித்தார் என்று புராணம் கூறும். பிராம்மீ முதலிய ஸப்த மாதாக்களுடன் வைநாயகி என்று மஹாலக்ஷ்மீ கூடி அஷ்டமாதாக்கள் சக்தி வழிபாட்டிலும் விநாயகர் வழிபாட்டிலும் இடம் பெறுகின்றனர்.

இவர்கள் அனைவரும் பகவானின் சக்திகளே. சக்தி சக்திமானிடம் அடங்கிய நிலை - பிரும்மசாரி. சக்தி வெளிப்பட்டுத் தனியே உணரப் பெறுகிற நிலை மனைவி அல்லது மனைவியருடன் கூடிய விநாயகர். சக்தி பிரிந்தும் உள்ளடங்கியுமுள்ள இரு நிலைகளும் தியானத்தில் உருவகப் படுத்தப்படுகின்றன. சக்தி உள்ளடங்கியவராக தக்ஷிணாமூர்த்தி, சக்தி பிரிந்தவராக உமாமஹேச்வரர், இரண்டுமே உள்ளடங்கிய உருவமே லிங்கம். சிவன் உள்ளடங்கிய காமாக்ஷி என்பது போல் சக்தி உள்ளடங்கிய விநாயகர் சக்தி வெளிப்பட்ட சித்தி விநாயகராக உச்சிஷ்டராக மஹா விநாயகராகக் காட்சி தருகிறார். சோணா நதியில்

கிடைக்கின்ற செந்நிறமுள்ள சிலைகள் சோண பத்ரம் எனப்படுபவை அவரது அருவ உருவம்.

முக அமைப்பு - பொதுவாக யானை முகம். இடது தந்தம் உடைந்ததாகவோ வலது தந்தம் உடைந்ததாகவோ இருக்கும். துதிக்கையுடனுள்ள சிங்கமுகம் கொண்டவர் ஸிம்ஹ கணபதி. இவரைத் தவிர மற்றவர் யானை முகமும் மனித உடலும் கொண்டவரே. நரமுகம் கொண்ட விநாயகர். விநாயகரின் கணத்தைச் சேர்ந்தவர். (திருச்சி நன்றுடையான் கோவிலிலும் சிதம்பரத்திலும்) சிவன் பார்வதி மைந்தனின் தலையை வெட்டு முன்னிருந்த நிலை என்று சிலர் விளக்கம் தருவர். த்விமுகர் இரு யானைத் தலை கொண்டவர். த்ரிமுகர் மூன்று யானைத் தலை கொண்டவர். த்விஜ கணபதி நான்கு யானை முகங்களுள்ளவர். முத்து, தங்கம், நீலம், பூவெள்ளை, குங்குமப்பூ போன்ற ஐந்து நிறங்களில் ஐந்து முகங்கள் கொண்டவர் ஹேரம்பர்.

கைகள் - வீர கணபதிக்கு 16; ஸ்ரீ வித்யா கணபதிக்கு 12; உத்தண்டர், மஹாகணபதி விக்க்நர், ஹேரம்பர், இவர்களுக்கு 10; ஊர்த்வர் துர்கா கணபதி, லக்ஷ்மீ கணபதி, ஸிம்ஹர், ஹரித்ரா கணபதி இவர்களுக்கு எட்டு.உச்சிஷ்டர் த்ரிமுகர் இவர்களுக்கு ஆறு. உச்சிஷ்டர், ருணமோசநர், ஏகதந்தர் ஏகாக்ஷரர், க்ஷிப்ரர், த்ர்யக்ஷரர், த்விஜர், த்விமுகர், நிருத்தர், புஷ்டி கணபதி, பால கணபதி, பக்த கணபதி, யோக கணபதி, லக்ஷ்மீ கணபதி, வக்ரதுண்டர், வரர், விக்க்ந ராஜர், சக்தி கணபதி, ஸங்கட ஹரணர், ஸித்தி கணபதி, ஸ்வர்ணாகர்ஷணர், ஹரித்ரா கணபதி இவர்களுக்கு 4; ருணமோசனருக்கு 2; பொதுவாக நான்கு கைகள் உள்ளவராகவே (ஸுஸிவர்ணம் சதுர்ப்புஜம்) தியானிப்பர்.

பொதுவாக ஆலயங்களில் ஆங்காங்கு தவமும் வழிபாடும் செய்த மகான்கள் தமக்கு அருள் புரிந்த தாம் கண்ட விநாயகர் வடிவத்தையே பிரதிஷ்டை செய்துள்ளனர். பெயர், வடிவம், முதலியவற்றில் இந்த மூர்த்திகள் மாறுபடுவதுமுண்டு.

# विघ्नेश्वरस्तुतिमञ्जरी

## प्रथमो भागः (स्तोत्राणि) विषयानुक्रमणिका)

## ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ
முதல் பாகம் (ஸ்தோத்திரங்கள்)

### பொருளடக்கம்

௧

# श्रीविघ्नेश्वरस्तुतिमञ्जरी

## ஸ்ரீ விக்நேச்வர ஸ்துதி மஞ்ஜரீ

### स्तोत्रणि

श्री गुरुभ्यो नमः ॥

वन्दे गुरुपदद्वन्द्वमवाङ्मनसगोचरम् ।
रक्तशुक्ल प्रभामिश्रमतर्क्यं त्रैपुरं महः ॥

दयमानदीर्घनयनां देशिकरूपेण दर्शिताभ्युदयाम् ।
वामकुचनिहितवीणां वरदां सङ्गीतमातरं वन्दे ॥

दयिन्या श्रीमात्रा दहरकुहरे सूत्रधरया
समादिष्टा वाचामधिपतिषु काप्यन्यतमिका ।
मदाराध्यश्रीमद्गुरुचरणनिर्णेजनजलैः
पवित्रे जिह्वाग्रे नटति मम देवी करुणया ॥

श्रुतिस्मृतिपुराणानामालयं करुणालयम् ।
नमामि भगवत्पादशङ्करं लोकशङ्करम् ॥

अपारकरुणामूर्तिं ज्ञानदं शान्तरूपिणम् ।
श्रीचन्द्रशेखरगुरुं प्रणतोऽस्मि मुदाऽन्वहम् ॥

परित्यज्य मौनं वटाधःस्थितिं च व्रजन्भारतस्य प्रदेशात्प्रदेशम् ।
मधुस्यन्दिवाचा जनान्धर्ममार्गे नयन्श्रीजयेन्द्रो गुरुर्भाति चित्ते ॥
तव तत्त्वं न जानामि तदमेयं धिया मम ।
अनीदृशस्त्वं प्रथितस्तादृशे ते गुरो नमः ॥

## ।। श्रीगणपतिषोडशनामस्तोत्रम् ।।

## ஸ்ரீ கணபதி ஷோடசநாம ஸ்தோத்திரம்

सुमुखश्चैकदन्तश्च कपिलो गजकर्णकः ।
लम्बोदरश्च विकटो विघ्नराजो विनायकः ।।
धूमकेतुर्गणाध्यक्षो भालचन्द्रो गजाननः ।
वक्रतुण्डश्शूर्पकर्णो हेरम्बः स्कन्दपूर्वजः ।।

षोडशैतानि नामानि यः पठेच्छृणुयादपि ।
विद्यारम्भे विवाहे च प्रवेशे निर्गमे तथा ।
सङ्ग्रामे सर्वकार्येषु विघ्नस्तस्य न जायते ।।

ஸுமுகஶ் சைகதந்தஶ் ச கபிலோ கஜகர்ணக:
லம்போதரஶ்ச விகடோ விக்ந்ராஜோ விநாயக:

தூமகேதுர் கணாத்த்யக்ஷ: பாலசந்த்ரோ கஜாநந:
வக்ரதுண்டஶ் ஶூர்பகர்ணோ ஹேரம்ப: ஸ்கந்தபூர்வஜ:

ஷோடஶைதாநி நாமாநி ய: படேத் ஶ்ருணுயாதபி
வித்யாரம்ப்பே விவாஹே ச ப்ரவேஶே நிர்கமே ததா
ஸங்க்ராமே ஸர்வகார்யேஷு விக்க்நஸ் தஸ்ய ந ஜாயதே.

*1. ஸுமுகர், 2. ஏகதந்தர், 3. கபிலர், 4. கஜகர்ணகர், 5. லம்போதரர், 6. விகடர், 7. விக்னராஜர், 8. விநாயகர், 9. தூமகேது, 10. கணாத்த்யக்ஷர் 11, பாலசந்த்ரர், 12. கஜானனர், 13. வக்ரதுண்டர், 14. சூர்ப்பகர்ணர். 15. ஹேரம்பர், 16. ஸ்கந்த பூர்வஜர், என்று 16 பெயர்கள் வாய்ந்தவர் ஸ்ரீ மஹாகணபதி. கல்வியைத்தொடங்கும்பொழுதும், திருமணத்திலும், புதுமனே புகும்போதும், பயணத்திலும், போரிலும், எல்லா நற்செயல்களிலும் இந்தப் பதினாறு பெயர்களை நினைத்துச் செயலாற்றுகிறவனுக்கு எவ்வகையான தடையும் தலை காட்டாது.*

# वेदस्तुतिः

ॐ गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीनामुपमश्रवस्तमम्। ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिः सीद सादनम् ॥ (ऋग्वेदः २-२३-१; वाजसनेय संहिता २३-१९; तैत्तिरीय संहिता २-३-१४-३).

तत्पुरुषाय विद्महे महादेवाय धीमहि। तन्नो दन्तिः प्रचोदयात्। (तैत्तिरीय आरण्यक प्र १०, अनुवाक १)

नि षु सीद गणपते गणेषु त्वामाहुर्विप्रतमं कवीनाम्। न ऋते त्वत्क्रियते किञ्चनारे महामर्कं मघवञ्चित्रमर्च ॥ (ऋग्वेदः१०-११२-९)

गणानां त्वा गणपतिं हवामहे प्रियाणां त्वा प्रियपतिं हवामहे निधीनां त्वा निधिपतिं हवामहे वसो मम । आहमजानि गर्भधमात्वमजासि गर्भधम्। (शुक्ल यजुर्वेद अध्याय २३, मन्त्र १९)

नमो गणेभ्यो गणपतिभ्यश्च वो नमो नमो व्रातेभ्यो व्रातपतिभ्यश्च वो नमो नमो विरूपेभ्यो विश्वरूपेभ्यश्च वो नमः। (शुक्लयजुर्वेद अध्याय १६, मन्त्र २५ कृष्णयजुर्वेद ४-४)

## ॥ गणेशसूक्तम् ॥

आ तू न इन्द्र क्षुमन्तं चित्रं ग्राभं सं गृभाय। महाहस्ती दक्षिणेन ॥ १ ॥
विद्मा हि त्वा तुविकूर्मिं तुविदेष्णं तुवीमघम्। तुविमात्रमवोभिः ॥ २ ॥
नहि त्वा शूर देवा न मर्तासो दित्सन्तम्। भीमं न गां वारयन्ते ॥ ३ ॥
एतो न्विन्द्रं स्तवामेशानं वस्वः स्वराजम्। न राधसा मर्धिषन्नः ॥ ४ ॥
प्रस्तोषदुप गासिषच्छ्रवत्साम गीयमानम्। अभि राधसा जुगुरत् ॥ ५ ॥
आ नो भर दक्षिणेनाभि सव्येन प्र मृश। इन्द्र मा नो वसोर्निर्भाक् ॥ ६ ॥

उप क्रमस्वा भर धृषता धृष्णो जनानाम्। अदाशूष्टरस्य वेदः ॥ ७ ॥ इन्द्र य उ नु ते अस्ति वाजो विप्रेभिः सनित्वः। अस्माभिः सु तं सनुहि ॥ ८ ॥ सद्योजुवस्ते वाजा अस्मभ्यं विश्वश्चन्द्राः । वशैश्च मक्षू जरन्ते ॥ ९ ॥

गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीना मुपमश्रवस्तमम्। ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिः सीद सादनम्। निषुसीद गणपते गणेषु त्वामाहुर्विप्रतमं कवीनाम्। न ऋते त्वक्रियते किं च नारे महामर्कं मघवञ्चित्रमर्च। अभिख्यानो मघवन्नाधमानान्त्सखे बोधि वसुपते सखीनाम्। रणंकृधि रणकृत्सत्य शुष्माऽभक्ते चिदा भजा राये अस्मान्। ॐ शांतिः शांतिः शांतिः। ऋक् (८-८१, २.२३)

## ब्रह्मणस्पतिसूक्तम्।

सोमानं स्वरणं कृणुहि ब्रह्मणस्पते॥ कक्षीवन्तं य औशिजः॥१ ॥
यो रेवान्यो अमीवहा वसुवित्पुष्टिवर्धनः॥ स नः सिषक्तु यस्तुरः ॥ २ ॥
मा नः शंसो अररुषोधूर्तिः प्रणङ् मर्त्यस्य ॥ रक्षा णो ब्रह्मणस्पते ॥३॥
स घा वीरो न रिष्यति यमिन्द्रो ब्रह्मणस्पतिः ॥ सोमो हिनोति मर्त्यम् ॥
४ ॥ त्वं तं ब्रह्मणस्पते सोम इन्द्रश्च मर्त्यम् ॥ दक्षिणा पात्वंहसः ॥ ५ ॥
उत्तिष्ठ ब्रह्मणस्पते देवयन्तस्त्वेमहे ॥ उप प्र यन्तु मरुतः सुदानव इन्द्र
प्राशूर्भवा सचा ॥ ६ ॥ त्वामिद्धि सहसस्पुत्र मर्त्य उपब्रूते धने हिते ॥
सुवीर्यं मरुत आ स्वश्व्यं दधीत यो व आचके ॥ ७ ॥ प्रैतु ब्रह्मणस्पतिः प्र
देव्येतु सूनृता॥ अच्छा वीरं नर्यं पंक्तिराधसं देवा यज्ञं नयन्तु नः ॥ ८ ॥यो
वाघते ददाति सूनरं वसु स धत्ते अक्षिति श्रवः ॥ तस्मा इळां सुवीरामा
यजामहे सुप्रतूर्तिमनेहसम् ॥९ ॥ प्र नूनं ब्रह्मणस्पतिर्मन्त्रं
वदत्युक्थ्यम् ॥ यस्मिन्निन्द्रो वरुणो मित्रो अर्यमा देवा ओकांसि चक्रिरे
॥ १० ॥ तमिद्वोचेमा विदथेषु शंभुवं मन्त्रं देवा अनेहसम् ॥ इमां च वाचं

प्रतिहर्यथा नरो विश्वेद्वामा वो अश्नवत् ॥ ११ ॥ को देवयन्तमश्नवज्जनं को वृक्तबर्हिषम् ॥ प्रप्र दाश्वान्पस्त्याभिरस्थितान्तर्वावत्क्षयं दधे ॥ १२ ॥ उप क्षत्रं पृञ्चीत हन्ति राजभिर्भये चित्सुक्षितिं दधे ॥ नास्य वर्ता न तरुता महाधने नार्मे अस्ति वज्रिणः ॥ १३ ॥ गणानां त्वा गणपतिं हवामहे कविं कवीनामुपमश्रवस्तमम् ॥ ज्येष्ठराजं ब्रह्मणां ब्रह्मणस्पत आ नः शृण्वन्नूतिभिः सीद सादनम् ॥ १४ ॥ देवाश्चित्ते असुर्य प्रचेतसो बृहस्पते यज्ञियं भागमानशुः ॥ उस्रा इव सूर्यो ज्योतिषा महो विश्वेषामिज्जनिता ब्रह्मणामसि ॥ १५ ॥ आ विबाध्या परिरापस्तमांसि च ज्योतिष्मन्तं रथमृतस्य तिष्ठसि ॥ बृहस्पते भीमममित्रदम्भनं रक्षोहणं गोत्रभिदं स्वर्विदम् ॥ १६ ॥ सुनीतिभिर्नयसि त्रायसे जनं यस्तुभ्यं दाशान्न तमंहो अश्नवत् ॥ ब्रह्मद्विषस्तपनो मन्युमीरसि बृहस्पते महि तत्ते महित्वनम् ॥ १७ ॥ न तमंहो न दुरितं कुतश्चन नारातयस्तितिरुर्न द्वयाविनः ॥ विश्वा इदस्माद्ध्वरसो वि बाधसे यं सुगोपा रक्षसि ब्रह्मणस्पते ॥ १८ ॥ त्वं नो गोपाः पथिकृद्विचक्षणस्तव व्रताय मतिभिर्जरामहे ॥ बृहस्पते यो नो अभि ह्वरो दधे स्वा तं मर्मर्तु दुच्छुना हरस्वती ॥ १९ ॥ उत वा यो नो मर्चयादनागसोऽरातीवा मर्तः सानुको वृकः ॥ बृहस्पते अप तं वर्तया पथः सुगं नो अस्यै देववीतये कृधि ॥ २० ॥ त्रातारं त्वा तनूनां हवामहेऽवस्पर्तरधिवक्तारमस्मयुम् ॥ बृहस्पते देवनिदो नि बर्हय मा दुरेवा उत्तरं सुम्नमुन्नशन् ॥ २१ ॥ त्वया वयं सुवृधा ब्रह्मणस्पते स्पार्हा वसु मनुष्या ददीमहि ॥ यानो दूरेतळितो या अरातयोऽभि सन्ति जम्भया ता अनप्रसः ॥ २२ ॥ त्वया वयमुत्तमं धीमहे वयो बृहस्पते पप्रिणा सस्निना युजा ॥ मा नो दुःशंसो अभिदिप्सुरीशत प्र सुशंसा मतिभिस्तारिषीमहि ॥ २३ ॥ अनानुदो वृषभो जग्मिराहवं निष्टप्ता शत्रुं पृतनासु सासहिः ॥ असि सत्य ऋणया ब्रह्मणस्पत उग्रस्य चिद्दमिता वीळुहर्षिणः ॥ २४ ॥ अदेवेन मनसा यो रिषण्यति शासामुग्रो मन्यमानो जिघांसति ॥ बृहस्पते

मा प्रणक्तस्य नो वधो नि कर्म मन्युं दुरेवस्य शर्धतः ॥ २५ ॥ भरेषु हव्यो नमसोपसद्यो गन्ता वाजेषु सनिता धनंधनम् ॥ विश्वा इदर्यो अभिदिप्स्वो मृधो बृहस्पतिर्वि ववर्हा रथां इव ॥ २६ ॥ तेजिष्ठया तपनी रक्षसस्तप ये त्वा निदे दधिरे दृष्टवीर्यम् ॥ आविस्तत्कृष्व यदसत्त उक्थ्यं बृहस्पते वि परिरापो अर्दय ॥ २७ ॥ बृहस्पते अति यदर्यो अर्हाद्युमद्विभाति क्रतुमज्जनेषु ॥ यद्दीदयच्छवस ऋतप्रजात तदस्मासु द्रविणं धेहि चित्रम् ॥ २८ ॥ मा नः स्तेनेभ्यो ये अभि द्रुहस्पदे निरामिणो रिपवोऽन्नेषु जागृधुः ॥ आ देवानामोहते वि व्रयो हृदि बृहस्पते न परः साम्नो विदुः ॥ २९ ॥ विश्वेभ्यो हि त्वा भुवनेभ्यस्परि त्वष्टाजनत्साम्नः साम्नः कविः ॥ स ऋणचिद्दणया ब्रह्मणस्पतिर्द्रुहो हन्ता मह ऋतस्य धर्तरि ॥ ३० ॥ तव श्रिये व्यजिहीत पर्वतो गवां गोत्रमुदसृजो यदङ्गिरः ॥ इन्द्रेण युजा तमसा परीवृतं बृहस्पते निरपामौब्जो अर्णवम् । ब्रह्मणस्पते त्वमस्य यन्ता सूक्तस्य बोधि तनयं च जिन्व ॥ विश्वं तद्भद्रं यदवन्ति देवा बृहद्वदेम विदथे सुवीराः ॥ ३२ ॥ सेमामविड्ढि प्रभृतिं य ईशिषेऽया विधेम नवया महा गिरा ॥ यथा नो मीढ्वान्स्तवते सखा तव बृहस्पते सीषधः सोत नो मतिम् ॥ ३३ ॥ यो नन्त्वान्य नमन्न्योजसोतादर्दर्मन्युना शम्बराणि वि ॥ प्राच्यावयदच्युता ब्रह्मणस्पतिरा चाविशद्वसुमन्तं वि पर्वतम् ॥ ३४ ॥ तद्देवानां देवतमाय कर्त्वमश्रथ्नन्दृळ्हाव्रदन्त वीळिता ॥ उद्गा आजदभिनद् ब्रह्मणा वलमगूहत्तमो व्यचक्षयत्स्वः ॥ ३५ ॥ अश्मास्यमवतं ब्रह्मणस्पतिर्मधुधारमभि यमोजसातृणत् ॥ तमेव विश्वे पपिरे स्वर्दृशो बहु साकं सिसिचुरुत्समुद्रिणम् ॥ ३६ ॥ सना ता काचिद्भुवना भवीत्वा माद्भिः शरद्भिर्दुरो वरन्त वः । अयतन्ताचरतो अन्यदन्यदिद्या चकार वयुना ब्रह्मणस्पतिः ॥ ३७ ॥ अभिनक्षन्तो अभि ये तमानशुर्निधिं पणीनां परमं गुहाहितम् । ते विद्वांसः प्रतिचक्ष्यानृता पुन र्यत आयन्तदुदीयुरा विशम् ॥ ३८ ॥ ऋतावानः प्रतिचक्ष्यानृता पुनरात

आ तस्थुः कवयो महस्पथः ॥ ते बाहुभ्यां धमितमग्निमश्मनि नकिः षो अस्त्यरणो जहुर्हितम् ॥ ३९ ॥ ऋतज्येन क्षिप्रेण ब्रह्मणस्पतिर्यत्र वष्टि प्रतदश्नोति धन्वना ॥ तस्य साध्वीरिषवो याभिरस्यति नृचक्षसो दृशये कर्णयोन्यः ॥ ४० ॥ स संनयः स विनयः पुरोहितः स सुष्टुतः स युधि ब्रह्मणस्पतिः ॥ चाक्ष्मो यद्वाजं भरते मती धनादित्सूर्यस्तपति तप्युतुर्वृथा ॥ ४१ ॥ विभु प्रभु प्रथमं मेहनावतो बृहस्पतेः सुविदत्राणि राध्या ॥ इमा सातानि वेन्यस्य वाजिनो येन जना उभये भुञ्जते विशः ॥ ४२ ॥ योऽवरे वृजने विश्वथा विभुर्महामु रण्वः शवसा ववक्षिथ ॥ स देवो देवान्प्रति पप्रथे पृथु विश्वेदु ता परिभूर्ब्रह्मणस्पतिः ॥ ४३ ॥ विश्वं सत्यं मघवाना युवोरिदापश्चन प्र मिनन्ति व्रतं वाम् ॥ अच्छेन्द्राब्रह्मणस्पती हविर्नोऽन्नं युजेव वाजिना जिगातम् ॥ ४४ ॥ उताशिष्ठा अनु शृण्वन्ति वह्नयः सभेयो विप्रो भरते मती धना ॥ वीळुद्वेषा अनु वश ऋणमाददिः स ह वाजी समिथे ब्रह्मण स्पतिः ॥ ४५ ॥ ब्रह्मणस्पतेरभवद्यथावशं सत्यो मन्युर्महि कर्मा करिष्यतः ॥ यो गा उदाजत्स दिवे वि चाभजन्महीव रीतिः शवसासरत्पृथक् ॥ ४६ ॥ ब्रह्मणस्पते सुयमस्य विश्वहा रायः स्याम रथ्यो वयस्वतः ॥ वीरेषु वीरां उप पृङ्ग्धि नस्त्वं यदीशानो ब्रह्मणा वेषि मे हवम् ॥ ४७ ॥ ब्रह्मणस्पते त्वमस्य यंता सूक्तस्य बोधि तनयं च जिन्व ॥ विश्वं तद्भद्रं यदवन्ति देवा बृहद्वदेम विदथे सुवीराः ॥ ४८ ॥ इन्धानो अग्निं वनवद्वनुष्यतः कृतब्रह्मा शूशुवद्रातहव्य इत् ॥ जातेन जातमति स प्रसर्सृते यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ४९ ॥ वीरेभिर्वीरान्वनवद्वनुष्यतो गोभी रयिं पप्रथ द्बोधति त्मना ॥ तोकं च तस्य तनयं च वर्धते यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५० ॥ सिंधुर्न क्षोदः शिमीवाँ ऋघायतो वृषेव वध्री रभि वष्ट्योजसा ॥ अग्नेरिव प्रसितिर्नाह वर्तवे यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५१ ॥ तस्मा अर्षति दिव्या असश्चतः ससत्वभिः प्रथमो गोषु गच्छति ॥ अनिभृष्टतविषिर्हन्त्योजसा

यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५२ ॥ तस्मा इद्विश्वे धुनयन्त सिंधवोऽच्छिद्रा शर्म दधिरे पुरूणि ॥ देवानां सुम्ने सुभगः स एधते यंयं युजं कृणुते ब्रह्मणस्पतिः ॥ ५३ ॥ ऋजुरिच्छंसो वनवद्वनुष्यतो देवयन्निदं देवयन्तमभ्यसत् ॥ सुप्रावीरिद्वनवत्पृत्सु दुष्टरं यज्वेदयज्योर्वि भजाति भोजनम् ॥ ५४ ॥ यजस्व वीर प्र विहि मनायतो भद्रं मनः कृणुष्व वृत्रतूर्ये ॥ हविष्कृणुष्व सुभगो यथाससि ब्रह्मणस्पतेरव आ वृणीमहे ॥ ५५ ॥ स इज्जनेन स विशा स जन्मना स पुत्रैर्वाजं भरते धना नृभिः ॥ देवानां यः पितरमाविवासति श्रद्धामना हविषा ब्रह्मणस्पतिम् ॥ ५६ ॥ यो अस्मै हव्यैर्घृतवद्भिरविधत्प्र तं प्राचा नयति ब्रह्मणस्पतिः ॥ उरुष्यतीमंहसो रक्षती रिषोंहोश्चिदस्मा उरुचक्रिरद्भुतः ॥ ५७ ॥ तमु ज्येष्ठं नमसा हविर्भिः सुशेवं ब्रह्मणस्पतिं गृणीषे ॥ इन्द्रं श्लोको महि दैव्यः सिषक्तु यो ब्रह्मणो देवकृतस्य राजा ॥ ५८ ॥ इयं वां ब्रह्मणस्पते सुवृक्तिर्ब्रह्मेन्द्राय वज्रिणे अकारि ॥ अविष्टं धियो जिगृतं पुरंधीर्जजस्तमर्यो वनुषामरातीः ॥ ५९ ॥ चत्तो इतश्चत्तामुतः सर्वा भ्रूणान्यारुषी ॥ अराय्यं ब्रह्मणस्पते तीक्ष्णशृंगोदृषन्निहि ॥ ६० ॥ अदो यद्दारु प्लवते सिंधोः पारे अपूरुषम् ॥ तदा रभस्व दुर्हणो तेन गच्छ परस्तरं ॥ ६१ ॥ अग्निर्येन विराजति सूर्यो येन विराजति ॥ विराज्येन विराजति तेनास्मान्ब्रह्मणस्पते विराज समदं कुरु ॥ ६२ ॥ (ऋक्-१-१८,४०) २ (२३-२६) १० (१५५)

## ब्रह्मणस्पतिसूक्तम्

शुचिं नु स्तोमं नवजातमद्येन्द्राग्नी वृत्रहणा जुषेथाम् — 

शुचिं नु स्तोमं श्रथद्वत्रम् । उभा वामिन्द्राग्नी प्रचर्षणिभ्यः । आवृत्रहणा गीर्भिर्विप्रः ॥ १ ॥ ब्रह्मणस्पते त्वमस्य यन्ता । सूक्तस्य बोधि तनयं च जिन्व । विश्वं तद्भद्रं यदवन्ति देवाः । बृहद्वदेम विदथे सुवीराः ॥ २ ॥ स ई सत्येभिः सखिभिः शुचद्भिः । गोधायसं वि धनसैरतर्दत् । ब्रह्मणस्पति र्वृषभिर्वराहैः । घर्मस्वेदेभिर्द्रविणं व्यानट् ॥ ३ ॥ ब्रह्मणस्पते

பிடௌஜாத்யைர் ப்ரஹ்மாதிபிரநுவ்ருதோ பக்தநிகரை:
கணக்ரீடாமோதப்ரமுதவிகடாத்யை: ஸஹசரை: ॥ 18

வஶித்வாத்யஷ்டாஷ்டௌ தஶ திககிலால் லோலமநுவாக்
த்ருதி: பாதூ: கட்கோஞ்ஜநரஸபலா: ஸித்தய இமா: ।
ஸதா ப்ருஷ்ட்டே திஷ்டந்த்யநிமிஷத்ருஶஸ் தந்முகலயா:,
கணேஶம் ஸேவந்தேऽப்யதிநிகடஸூபாயநகரா: ॥ 19

ம்ருகாங்காஸ்யா ரம்பாப்ரப்ருதிகணிகா யஸ்ய புரத:
ஸுஸங்கீதம் குர்வந்த்யபி குதுக கந்தர்வ ஸஹிதா: ।
முத: பாரோ நாத்ரேத்யநுபமபதே தோர்விகலிதா
ஸ்திரம் ஜாதம் சித்தம் சரணமவலோக்யாஸ்ய விமலம் ॥ 20

ஹரேணாயம் த்யாதஸ் த்ரிபுரமதநே சாஸுரவதே
கணேஶ: பார்வத்யா பலிவிஜயகாலேऽபி ஹரிணா ।
விதாத்ரா ஸம்ஸ்ருஷ்டாவுரகபதிநா க்ஷோணிதரணே
நரை: ஸித்தௌ முக்தௌ த்ரிபுவநஜயே புஷ்பதநுஷா ॥ 21

அயம் ஸுப்ராஸாதே ஸுர இவ நிஜாநந்தபுவநே.
மஹாந் ஸ்ரீமாநாத்யோ லகுதரக்ருஹே ரங்கஸத்ருஶ: ।
ஶிவத்வாரே த்வா:ஸ்த்தோ ந்ருப இவ ஸதா பூபதிக்ருஹே
ஸ்திதோ பூத்வோமாங்கே ஶிஶுகணபதிர் லாலநபர: ॥ 22

அமுஷ்மிந் ஸந்துஷ்டே கஜவதந ஏவாபி விபுதே
ததஸ் தே ஸந்துஷ்டாஸ் த்ரிபுவநகதா: ஸ்யுர் புதகணா: ।
தயாலுர் ஹேரம்போ நச பவதி யஸ்மிம்ஶ்ச புருஷே
வ்ருதா ஸர்வம் தஸ்ய ப்ரஜநநமத: ஸாந்த்ரதமஸி ॥ 23

வரேண்யோ ப்ப்ருஶுண்டி. ப்ருகு குரு குஜா முத்கலமுகா:
ஹ்யபாராஸ் தத்பக்தா ஜப ஹவந பூஜா ஸ்துதிபரா: ।
கணேஶோயம் பக்தப்ரிய இதி ச ஸர்வத்ர கதிதம்,
விபக்திர் யத்ராஸ்தே ஸ்வயமபி ஸதா திஷ்டதி கண: ॥ 24

ம்ருத: காசித் தாதோஶ் ச்சதவிலிகிதர் வாபி த்ருஷத:
ஸ்ம்ருதா வ்யாஜாந் மூர்த்தி: பதி யதி பஹிர் யேந ஸஹஸா ।
அஶுத்தோऽத்தா த்ரஷ்டா ப்ரவததி ததாஹ்வா கணபதே:
ஶ்ருதா ஶுத்தோ மர்த்யே பவதி துரிதாத் விஸ்மய இதி ॥ 25

பஹிர்த்வாரஸ்யோர்த்வம் கஜவதநவர்ஷ்மேந்த்தநமயம்
ப்ரஶஸ்தம் வா க்ருத்வா விவிதகுஶலைஸ் தத்ர நிஹிதம் ।

ப்ரபாவாத் தந்மூர்த்யா பவதி ஸதநம் மங்கலமயம்
விலோக்யாநந்தஸ் தாம் பவதி ஜகதோ விஸ்மய இதி ॥ 26

ஸிதே பாத்ரே மாஸே ப்ரதிபரதி மத்யாந்ஹஸமயே,
ம்ருதோ மூர்த்திம் க்ருத்வா கணபதிதிதௌ டுண்டிஸத்ருசீம்।
ஸமர்ச்சயுத்ஸாஹ: ப்ரபவதி மஹாந் ஸர்வஸதநே
விலோக்யாநந்தஸ் தாம் ப்ரபவதி ந்ருணாம் விஸ்மய இதி ॥ 27

ததா ஹ்யேக: ச்லோகா வரயதி மஹிம்நோ கணபதே:
கதம் ஸ ச்லோகேஸ்மிந் ஸ்துத இதி பவேத் ஸம்ப்ரபடிதே ।
ஸ்ம்ருதம் நாமாஸ்யைகம் ஸக்ருதிதமநந்தாஹ்வயஸமம்
யதோ யஸ்யைகஸ்ய ஸ்தவநஸத்ருசம் நாந்யதபரம் ॥ 28

கஜவதந விபோ யத் வர்ணிதம் வைபவம் தே
த்விஹ ஜநுஷி மமேத்தம் சாரு தத் தர்சயாசு ।
த்வமஸி ச கருணாயா: ஸாகர: க்ருத்ஸ்நதாதா-
ப்யதி தவ ப்ருதகோऽஹம் ஸர்வதா சிந்தகோऽஸ்மி ॥ 29

ஸுஸ்தோத்ரம் ப்ரபடது நித்யமேததேவ
ஸ்வாநந்தம் ப்ரதி கமநேऽப்யயம் ஸுமார்க்க: ।
ஸஞ்சிந்த்யம் ஸ்வமநஸி தத்பதாரவிந்தம்
ஸ்தாப்யாக்ரே ஸ்தவநபலம் நதீ: கரிஷ்யே ॥ 30

கணேசதேவஸ்ய மஹத்வமேதத்
ய: ச்ராவயேத் வாபி படேச்ச தஸ்ய ।
க்லேசா லயம் யாந்தி, லபேத சீக்ரம்
ஸ்த்ரீ புத்ர வித்யார்த்த க்ருஹம் ச முக்திம் ॥ 31

*எவரது வடிவம் உருவகப்படுத்த முடியாததோ, துதிப்பதும் வலிவின்றி தளருமோ, எவரால் இந்த உலகம் உண்டாகிறதோ எவரால் காப்பாற்றப்பட்டு, ஒடுக்கிக் கொள்ளப்படுகிறதோ, எவர் முதல் புருஷராக முனிவர் கூட்டங்களால் போற்றப்பெறுகிறரோ, அந்த மகாகணபதியின் ஸ்தோத்திரத்தைச் சொல்லுகிறேன். (1)*

*காணபத்யர்கள் கணபதி எனவும் சைவர்கள் சிவன் எனவும் ஸௌரர்கள் சூரியனெனவும் வைஷ்ணவர்கள் விஷ்ணு எனவும், சாக்தர்கள் உலகத்தோற்றத்தின் மூலகாரணமான அம்பிகை எனவும் சொல்கிறுர்கள். நான் அறியேன் எதுபரம்பொருள் என. எல்லாமும் பரம்பொருளே. (2)*

*யோகமதத்தைச் சேர்ந்தவர் ஈச்வரன் எனவும், மீமாம்ஸகர்கள் எல்லா விதமான கர்மங்கள் எனவும் வேதாந்திகள் பரப்ரம்ஹம் எனவும் ஸாங்கியர்கள் முக்குணங்களாலான ப்ரக்ருதி என்றும், நியாய மதஸ்தர்கள் உலகத்தைப்படைப்பவர் என்றும், பௌத்தர்கள் விஜ்ஞானம் என்றும் இந்தக் கணபதியையே சொல்கின்றனர். (3)*

*அறிவிற்கு எட்டாத இவரை எப்படி அறியமுடியும்? முன்கூறிய முறைகள் வெளிப்பொருளைக் காண உதவுபவை. எவர் எவர் எப்படிப் புரிந்து கொள்வரோ அப்படி கணபதிதோன்றுகிறார். அவரது செயல் முறை மிகப்பெரிது. அவரும் மிகப்பெரியவர். அணுபோல் மிகநுண்ணியவர், ஒலிவடிவினர், ஒளிவடிவினவர், பிந்துவானவர், ஆகாயம் போன்றவர். ஸத்தான பொருள். அஸத்தான பொருள் எல்லாம் அவரே. (4)*

*பல விதமான, எண்ணற்ற வாய் கண் கை கால் இருதயம் கொண்டவராக பல உருவங்கள் பல முகங்கள் பலபெயர்கள் கொண்ட விச்வரூபியாக இந்தக் கணபதியே விளங்குகிறார். பலருக்கும் அவரவர்களின் பலவாறான உபாஸனைக்கு ஏற்றவாறு, தன் சக்தியால் எண்ணற்ற விரும்பிய கர்மபலனைக் கொடுப்பவராக இவர் விளங்குகிறார். (5)*

*எவர் முடிவும் நடுவும் அற்றவரோ, பல பெரும் பொருள்களுக்கும் எவர் ஆதியோ, ஒன்றிலும் ஒட்டாமல் ஆகாயம் போல் நின்று எல்லாவற்றையும் உண்டாக்கி தான் அவற்றிலிருந்தும் தனித்திருப்பவரோ, தன்னை நினைப்பவர்களின் இதயத்தில் அமர்ந்து நினைத்ததும் விரும்பியதைத் தருகிறவரோ, எல்லாராலும் வணங்கத் தக்கவரோ அந்தப்பெருந் தேவருக்கு வணக்கம் (6)*

*ஜபம் செய்பவருக்கு, கம் என்ற ஏகாக்ஷரமந்திரம் ''ஓங்காரம்'' ஸ்வாஹா'' இணைந்தது* गां गीं गूं *என்றவாறு கரநியாஸமும் அங்கநியாஸமும். கணகர் ருஷி நிச்ருத் சந்தஸ் கணபதி தேவதை, கம் பீஜம், ஸ்வாஹா சக்தி:. இது விரும்பியதைத் தரும். (7)*

ஸகுணமாகப் பரமாத்மாவைச் சொன்னால், 'க'வை மந்திரமாகக் கொண்ட ஹேரம்பராக ஆனுகை அவர் ஆகிறார். நிர்க்குணர் எனக் கொண்டால், கணபதியாகிய ப்ரஹ்மம் ஒன்றே, பிரக்ருதி-புருஷன் என்று இரண்டு பிரிவாக இந்தக் கணபதி ஆனார். ஆக்குதல் காத்தல் அழித்தல் ஆகியவற்றைச் செய்கிறவராக, எல்லாவற்றிற்கும் முதல்வராக, முக்காலத்தையும் தம்மிடமே கொண்டவராக, ஈசனுக விளங்குகிறார். (8)

'க' என்னும் அக்ஷரம் கழுத்துக்கு மேல் யானைமுகத்திற்கு ஒப்பானது. கழுத்தின் கீழே 'ண' என்ற அக்ஷரம் வயிற்றுக்கு ஒப்பான அமைப்புள்ள மனித உருவை ஒத்தது. இடுப்புக்குக் கீழே பாதம் வரையில் ஈச என்ற எழுத்துக்கள். இப்படி கணேச என்ற உருவம் பூ: புவ: ஸுவ: என்ற மூவுலகிற்கு ஒப்பாகவும் விளங்குகின்றது. (9)

'கணேச' என்ற மூன்று எழுத்தைக் கொண்ட பெயரே, மேலானது; ஸுகத்தைக் கொடுக்கக்கூடியது. மாந்தர் இதை ஒரு தடவை உரக்க உச்சரித்தாலும், தூய்மை தரும். 'கணேச' என்ற நாமத்தின் ஜபத்தைப் பண்ணுகிற பக்தர்களின் புண்ணியம் அளவிட முடியாதது. அவரது முழுப்பெருமையும் எத்தகையது? என்பதை எவர் அறிவார்? (10)

'கணேச' என்ற பெயரை அவர் முன்னிலையில் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டு, அடிக்கடி சொல்பவன் கணபதியாகவே ஆகிவிடுகிறான். இந்தப் பெயரைச் சொல்வதால் 'ஸ்வரூபஞானம்' என்ற ஆத்மஞானம் உண்டாகி ஸுஷுப்தியில் அநுபவித்த ஆத்மானந்தத்தை எப்பொழுதும் உணர்ந்து, பரமஞானியாக விளங்குவான். இது அனைத்தும் நாம மஹிமை. (11)

இந்த உலகத்தினுள் கணபதி இருக்கிறார்; கணபதியினிடத்தில் இந்த உலகம் அடங்கினது. எங்கே கணபதி இருக்கிறாரோ அங்கே தைரியம், புத்தி, நிறைந்த செல்வம் ஆகியவை உள்ளன. மங்களமான கணபதி என்ற பெயரைச் சொல்பவன் வீடுபெறுகிறான், யானைமுகனைக் காண்பவன் எல்லாத் தேவர்களின் முகத்தையும் காண்பவனுகிறான். (12)

*பல வகையான துயரங்களை அடைந்த ஒருவன் கணேசரை இதயத்தில் நினைத்தால், அடுத்தநொடியே, மேகக் கூட்டம் போல் துக்கம் கலைந்து மறைகிறது. காட்டில் வழி நடக்கும்போதும், வித்தியாரம்பத்திலும், யுத்தத்திலும், சத்துருபயம் ஏற்படும் சமயத்திலும், பிரயாண காலத்திலும், புதிய இடத்தில் புகும்போதும், உயிருக்கு ஆபத்தான சமயத்திலும் கணநாயகனை நினைப்பவனுக்கு உடனே எல்லாத் துயரமும் அறவே நீங்கும். முடிவில் அவன் கணபதியின் ஸ்தானத்தை அடைகிறான். (13)*

*கணாத்யக்ஷர், ஜ்யேஷ்டர், கபிலர், மங்களநிதி, தயாளு, ஹேரம்பர், வரதர், சிந்தாமணி, அஜர், வராநீசர், (வரேசர்) டுண்டி, கஜவதனர், சிவஸுதர், மயூரேசர், கௌரீதனயர் என்ற பெயர்களைப் பக்தன் ஓயாமல் ஓதுகிறான். (14)*

*இந்தக் கணபதியே சிவபெருமான், திருமால், சூரியன் சந்திரன், நான்முகன், பூமி, நீர், நெருப்பு, காற்று, வானம், மலை, கடல், அங்காரகன், நட்சத்திரம், இந்திரன், குரு, புதன், ராகு-கேது, குபேரன், யமன், வருணன் சுக்ரன் சனி ஆகிய எல்லா மாகவும் இருக்கிறார். (15)*

*நெருப்பு இவரது முகம், விஷ்ணு இவர் திருவடிகள். பிரமன் ஜனனக்கருவி. சூரியனும் சந்திரனும் இவர் கண்கள். காமனுன மன்மதன் இவரது ஹ்ருதயம். இந்திரன் கைகள். பூமி வயிறு. வேள்வி கணபதியின் முழு உருவம். (16)*

*மதிப்பு மிக்க அணிகலன்களும் செந்நிற ஆடைகளும் உடலை அலங்கரிக்க, சிம்மாஸனத்தில் அமர்ந்து அறிவாளிகளுக்கு அரசரான யானை முகத்தோன் உதித்த சூரியனின் ஒளிக்கொப்பான செவ்வொளியுடன், சாமரம் ஏந்தி இடதுபுறத்தில் ஸித்திதேவியும் வலதுபுறத்தில் புத்தி தேவியும் அமர்ந்திருக்க புன்சிரிப்புடன் விளங்குகிறார். (17)*

*சுற்றிலும் சிறந்த முனிவரும் சித்தரும் அசுரரும் இறைவனின்முன் கைகூப்பியவராக நின்று, பலஸ்தோத்திரங்களைக் கொண்டு துதிக்கின்றனர். இந்திரன் பிரும்மா முதலிய அடியார்களாலும் கணக்ரீடர், ஆமோதர், பிரமோதர், விகடர் முதலிய துணைவர்களாலும் சூழப்பட்டுள்ளார். (18)*

வசித்வம் முதலிய எட்டு, ப்ரக்ருதி ஸித்தி 8,10 திக்கிலும் செல்லுதல், மந்திர ஸித்தி, வாக்ஸித்தி, தரணஸித்தி, பாதுகாஸித்தி, கட்கஸித்தி, அஞ்ஜனஸித்தி ரஸஸித்தி பலஸித்தி என்று பல ஸித்திகளைத் தருகிற தேவதாசக்திகள் எப்போதும் பின்புறத்தில் இமை கொட்டாமல், கணேசரின் முகத்தையே பார்த்து மிக அருகில் காணிக்கைப் பொருள்களைக் கையில் ஏந்தி நின்று கணேசரை வழிபடுகிறார்கள். (19)

எவருக்குமுன் கலையார்வமுள்ள கந்தர்வர்களுடன் சந்திரனைப்போன்ற அழகிய முகமுள்ள ரம்பை முதலிய நடனமாதர்கள் அழகாகப்பாடுகின்றனரோ, எந்த ஈடிணையற்ற கணேசரின்ஸந் நிதியில் ஆனந்தத்திற்கு எல்லையே (கரையே) இல்லையோ, அகந்தை குலைகிறதோ, அவருடைய தூயதிருவடிகளைக் கண்டு சித்தம் சஞ்சலமின்றி நிலைத்துள்ளது. (20)

பரமசிவன் திரிபுஸம்ஹாரம் செய்த சமயத்திலும் பார்வதிதேவி, பண்டன் முதலிய அரக்கர்களை அழித்த பொழுதும் வாமனாவதாரம் செய்த திருமால் மகாபலியை வென்றபோதும் பிரும்மா உலகைப் படைத்தபொழுதும், ஆதிசேஷன் இந்த உலகைத் தாங்கும் பொழுதும், மாந்தர் தாங்கள் வேண்டியவற்றை அடைவதற்கும் வீடுபெறவும், மலரம்பு கொண்ட காமன் மூவுலகை வெற்றி காணவும் கணபதியே தியானம் செய்யப்பட்டார். (21)

பெருமைமிக்க ஆதிதேவரான இந்த கணபதி தன் இருப்பிடமான ஸ்வாநந்தபுவனத்தில் அழகிய திருமாளிகையில் தேவர் போலும். எளியவர் வீட்டில் ஆண்டி போலும் சிவாலய வாயிலில் வாயிற்காப்போன் போலும், அரசர் அரண்மனையில் அரசர் போலவும், உமாதேவியின் மடியில் கொஞ்சுதலை எதிர்பார்க்கிற சிசு (பாலகணேசர்) போலவும் உள்ளார். (22)

யானை முகத்தவரான இந்தக் கணபதி தேவர் மகிழ்ந்தால் மூவுலகிலுள்ள தேவர்களும் மகிழ்ச்சியடைவார்கள். இந்த ஹேரம்பர் எவனிடத்தில் பரிவுடன் இல்லையோ அவனுடைய பிறவி பயனற்றதாகிறது. (23)

வரேண்யர், ப்ருசுண்டி முனிவர், சுக்ரன், குரு, குஜன் மற்றும் முத்கலர் முதலிய பல முனிவர்களும் இந்தக் கணபதியிடம் பக்தி செலுத்தி ஜபம் பூஜை ஹோமம் துதி ஆகியவற்றில் ஈடுபடுகின்றனர். பக்தர்களின் அன்பு கொண்டவர் கணபதி என்று எல்லா இடங்களிலும் சொல்லியிருக்கிறது. சிறந்த பக்தியுள்ள இடத்தில் கணபதி இருக்கிறார். *(24)*

மண்ணாலோ உலோகத்தாலோ உருவம் அமைத்தும், இலைப்பட்டைகளில் எழுதியும், கல்லில் செதுக்கியும் உள்ள கணபதியின் வடிவத்தை, வழியில் திடீரென நினைத்தவனும் கண்டவனும், அவரது பெயரைக் கேட்டவனும் தூய்மையற்றிருந்தாலும் தூய்மை பெறுகிறான். பாபத்திலிருந்து விடுபடுகிறான். இது விந்தையே. *(25)*

வாசலின் மேற்புரத்தில், மரத்தாலான கணபதியின் உருவம் நல்ல முறையில் செய்து அதற்கான முறையறிந்து பெரியோர்களால் நன்கு ப்ரதிஷ்டை செய்தால் அந்த மூர்த்தியின் ப்ரபாவத்தல் அந்த வீடு மங்களம் நிறைந்ததாக விளங்கும். அந்த வீட்டைப் பார்க்கும் உலகமுங்கூட மகிழ்ச்சியடையும். இதுவும் விந்தையே. *(26)*

சரத்ருதுவில் பாத்ரபத மாதம் சுக்லபக்ஷத்தில் கணபதியின் திதியான சதுர்த்தியில், நண்பகல் வேளையில் மண்ணால் டுண்டி கணபதியின் உருவத்தைச் செய்து பூஜிப்பதால் எல்லா வீடுகளிலும் உத்ஸாஹம் கணப்படுகிறது. இதைக் கண்ணுறும் ஜனங்கள் ஆனந்தம் அடைகிறார்கள். இதுவும் விந்தையே. *(27)*

ஆக கணபதி மஹிம்ன ஸ்தோத்ரத்தில் ஒவ்வொரு சுலோகமும் உயர்ந்ததே. இந்த சுலோகத்தில் அவர் எவ்வாறு துதிக்கப்பட்டுள்ளார் என்பதைப் படித்ததும் உணரலாம். ஒரு நாமத்தை ஒரு தடவை நினைத்தாலும் பல நாமங்களைச் சொன்ன பலன் கிட்டும். இந்தத் துதிக்கு ஈடாக வேறு துதி இல்லை. *(28)*

எங்கும் நிறைந்த யானை முகத்தோனே! இப்பிறவியில் உன் வைபவம் என்னால் வர்ணிக்கப்பெற்றது. அழகான இத்தகைய உமது உருவத்தை எனக்குக் காட்டுவீர். நீர் கருணைக்கடல், எல்லாவற்றையும் அளவின்றி கொடுப்பவர். உம் வேலைக்காரன் நான்; எப்போதும் உம்மையே நினைப்பவன். *(29)*

*மிகவும் அழகிய இந்தத் துதியை நித்தியமும் படிக்க வேண்டும். ஸ்வாநந்த புவனத்தை அடைய இதுவே சிறந்த வழி. மனத்தில் கணேசரின் திருவடித் தாமரைகள் நன்கு நிலைக்கத் தக்கவை. முதலில் துதியின் பயனை முன்னிட்டு யானை முகத்தோனை வணங்குகிறேன். (30)*

*கணேசதேவருடைய இந்த மகிமையை எவன் படிக்கிறானோ, கேட்கும்படி செய்கிறானோ, அவனுடைய துயரங்கள் யாவும் மறைந்துவிடும். மனைவி, மகப்பேறு, படிப்பு, செல்வம், உறைவிடம், முக்தி ஆகிய எல்லாவற்றையும் அவன் விரைவில் பெற்று மகிழ்வான். (31)*

## ॥ श्रीगणाधिपपञ्चरत्नम् ॥

सरागिलोकदुर्लभं विरागिलोकपूजितं
सुरासुरैर्नमस्कृतं जरापमृत्युनाशकम् ।
गिरा गुरुं श्रिया हरिं जयन्ति यत्पदार्चका
नमामि तं गणाधिपं कृपापयःपयोनिधिम् ॥ १ ॥

गिरीन्द्रजामुखाम्बुजप्रमोददानभास्करं
करीन्द्रवक्त्रमानताघसङ्घवारणोद्यतम् ।
सरीसृपेशबद्धकुक्षिमाश्रयामि संततं
शरीरकान्तिनिर्जिताब्जबन्धु बालसंततिम् ॥ २ ॥

शुकादिमौनिवन्दितं गकारवाच्यमक्षरं
प्रकाममिष्टदायिनं सकामनम्रपङ्क्तये ।
चकासतं चतुर्भुजैर्विकासिपद्मपूजितं
प्रकाशितात्मतत्त्वकं नमाम्यहं गणाधिपम् ॥ ३ ॥

नराधिपत्वदायकं स्वरादिलोकनायकं
ज्वरादिरोगवारकं निराकृतासुरव्रजम् ।
कराम्बुजोल्लसत्सृणिं विकारशून्यमानसैः
हृदा सदा विभावितं मुदा नमामि विघ्नपम् ॥ ४ ॥

श्रमापनोदनक्षमं समाहितान्तरात्मनां
सुमादिभिः सदार्चितं क्षमानिधिं गणाधिपम्।
रमाधवादिपूजितं यमान्तकात्मसंभवं
शमादिषङ्गुणप्रदं नमाम्यहं विभूतये॥ ५ ॥

गणाधिपस्य पञ्चकं नृणामभीष्टदायकं
प्रणामपूर्वकं जनाः पठन्ति ये मुदा युताः।
भवन्ति ते विदां पुरः प्रगीतवैभवा जवात्
चिरायुषोऽधिकश्रियः सुसूनवो न संशयः॥ ६ ॥

## ஸ்ரீ கணாதிபபஞ்சரத்னம்

ஸராகிலோகதுர்லபம் விராகிலோகபூஜிதம்
ஸுராஸுரைர் நமஸ்க்ருதம் ஜராபம்ருத்யுநாஶகம்।
கிராகுரும் ஶ்ரியா ஹரிம் ஜயந்தி யத்பதார்சகா:
நமாமிதம் கணாதிபம் க்ருபாபய:பயோநிதிம்॥ 1

கிரீந்த்ரஜாமுகாம்புஜப்ரமோததாநபாஸ்கரம்
கரீந்த்ரவக்த்ரமாநதாகஸங்க்கவாரணோத்யதம்।
ஸரீஸ்ருபேஶ பத்த்தகுக்ஷிமாஶ்ரயாமி ஸந்ததம்
ஶரீரகாந்தி நிர்ஜிதாப்ஜபந்த்து பாலஸந்ததிம் 2

ஶுகாதி மௌநிவந்திதம் ககாரவாச்ய மக்ஷரம்
ப்ரகாமமிஷ்டதாயிநம் ஸகாமநம்ரபங்க்தயே।
சகாஸதம் சதுர்புஜைர் விகாஸிபத்மபூஜிதம்
ப்ரகாஶிதாத்ம தத்வகம் நமாம்யஹம் கணாதிபம்॥ 3

நராதிபத்ய தாயகம் ஸ்வராதிலோகநாயகம்
ஜ்வராதிரோக வாரகம் நிராக்ருதா ஸுரவ்ரஜம்।
கராம்புஜோல்லஸத்ஸ்ருணிம் விகாரஶூன்யமானஸை:
ஹ்ருதா ஸதாவிபாவிதம் முதா நமாமி விக்க்நபம் 4

ஶ்ரமாபநோதந க்ஷமம் ஸமாஹிதாந்தராத்மநாம்
ஸுமாதிபி: ஸதார்சிதம் க்ஷமாநிதிம் கணாதிபம்।
ரமாதவாதிபூஜிதம் யமாந்தகாத்மஸம்ப்பவம்
ஶமாதி ஷட்குணப்ரதம் நமாம்யஹம் விபூதயே 5

கணாதிபஸ்ய பஞ்சகம் ந்ருணாம பீஷ்டதாயகம்
ப்ரணாமபூர்வகம் ஜநா: படந்தியே முதாயுதா: ।
பவந்திதே விதாம்புர: ப்ரகீதவைபவா: ஜவாத்
சிராயுஷோதிகஸ்ரிய: ஸுஸூநவோ ந ஸம்ஸய: 6

*பற்று மிக்கவருக்கு அரியவர், பற்றற்றவரால் வழிபடப் பெற்றவர், தேவர் அசுரர்களால் வணங்கப்பெற்றவர், மூப்பும் அகால மரணமுமகற்றுபவர், திருவடி தொழுபவரைப் பேச்சால் ப்ருஹஸ்பதியையும் செல்வத்தால் ஸ்ரீபதியையும் வெல்லச் செய்பவர், கருணைக்கடல், அந்த கணபதியை வணங்குகிறேன் (1)*

*மலைமகளின் முகத்தாமரை மலரச் செய்கிற சூர்யன், யானை முகத்தவர், வணங்கியவரின் பாபத்தை அகற்றுபவர், வயிற்றில் பாம்பரசனை இடுப்பணியாக அணிந்தவர், தன் ஒளியால் இளஞ்சூர்யர்களை மங்கச் செய்பவர், இவரைச் சார்ந்துளேன் (2)*

*சுகர் முதலான முனிவரால் வழிபடப் பெற்றவர் 'க' எனும் எழுத்தின் உட்பொருள், குறைவற்றவர், நான்கு கைகளுடன் விளங்குபவர், மலர்ந்த தாமரை மீதமர்ந்தவராக வழிபடப் பெறுபவர், ஆத்ம தத்துவத்தை உணரச் செய்பவர். இந்தக் கணபதியை வணங்குகிறேன்.*

*பேரரசை அருள்பவர், ஸ்வர்க்கம் முதலிய உலகங்களின் நாயகர், ஜ்வரம் முதலிய நோய் தீர்ப்பவர், அசுரக் கூட்டத்தை விரட்டியவர், தாமரை போன்ற கையில் துறட்டி ஏந்தியவர், கெட்ட எண்ணமற்ற மனத்தினரால் இதயத்தில் எப்போதும் போற்றப்படுபவர், இந்த விக்னேசுவரரை வணங்குகிறேன்.*

*ஸமாதியில் அமர்ந்தவர்களின் தளர்வு நீக்குபவர், பூ முதலியவற்றால் வழிபடப்பெறுபவர், பொறுமைக்கு இருப்பிடம், கணங்களின் தலைவர், நாராயணன் முதலியவரால் போற்றப்பெறுபவர், யமனின் எதிரியான சிவபெருமானின் புதல்வர், அடக்கம் முதலிய ஆறு குணங்களை யருள்பவர் இவரைச் சிறப்பு பெற வணங்குகிறேன் (5)*

*இந்த கணபதிக்கான ஐந்து சுலோகங்களும் படிக்க விரும்பியதைத் தருபவை. பெரும் புகழும் நீண்ட ஆயுளும் தருபவை. நற்சந்ததியும் பெறுவர் (6) (ஸ்ரீ ஸதாசிவாபிநவ நிருஸிம்ஹபாரதீ ஸ்வாமிகள். சிருங்கேரி )*

## ॥ श्रीगणाधिपस्तुतिः ॥

(गोकर्णक्षेत्रे)

कुक्षिस्फुरन्नागभीत्या मूषिकः प्रपलायते।
इति मत्वा मयूरं किमारूढोऽसि गणाधिप॥ १ ॥

मत्कुक्षिसुस्थमखिलं जगदिति सर्वान्प्रबोधयितुम्।
बृहदुदरतां कृपाब्धे धत्से किं करिवरास्य त्वम्॥ २ ॥

त्वद्दर्शनकृतहासं चन्द्रमसं हन्तुमुद्युक्तम्।
त्वामनुनेतुं ताराः कुसुमव्याजेन सेवन्ते॥ ३ ॥

यच्चातुर्येणैव हि लोकानुद्धर्तुमम्बिकानाथः।
गोकर्णे स्थितिमकरोल्लोकहितं तं प्रणौमि विघ्नेशम्॥ ४ ॥

(श्रीमूवात्तुपुलाक्षेत्रे)

जननी मृगयतु मामित्याच्छायात्मस्वरूपमीशतनुः।
भासि गिरिजात्मज त्वं किं करिवरवदन मे ब्रूहि॥

(श्रीकालटिक्षेत्रे)

अश्वत्थोऽयं प्रपञ्चो न हि खलु सुखलेशोऽप्यत्र तस्माज्जिहास्यो
लोका इत्यादरेण प्रणतभयहरो वारणाग्र्यास्य एषः।
बोधायैव स्वयं किं वसति दृढतराश्वत्थमूले कृपालुः
नाहं जानामि यूयं वदत बुधवराः किं तथा वान्यथा वा॥

## ஸ்ரீ கணாதிப ஸ்துதி:

(கோகர்ணத்திலுள்ள கணபதி குறித்து)

குக்ஷிஸ்ப்புரந்நாகபீத்யா மூஷிக: ப்ரபலாயதே
இதி மத்வா மயூரம் கிம் ஆருடோ^ஸி கணாதிப (1)

மத்குக்ஷிஸம்ஸ்த்தமகிலம் ஜகதிதி ஸர்வான் ப்ரபோதயிதும்
ப்ருஹதுதரதாம் க்ருபாப்த்தே தத்ஸே கிம் கரிவராஸ்ய த்வம் (2)

த்வத்த்ர்ஸந க்ருதஹாஸம் சந்த்ரமஸம் ஹந்துமுத்யுக்தம்
த்வாமநுநேதும் தாரா: குஸுமவ்யாஜேந ஸேவந்தே (3)

யச்சாதுர்யேணைவ ஹி லோகாநுத்தர்துமம்பிகாநாத:
கோகர்ணே ஸ்திதிமகரோத் லோகஹிதம் தம் ப்ரணௌமிவிக்நேஶம்

*வயிற்றிலுள்ள பாம்பிடம் பயந்து எலி ஓடுகிறது என்றெண்ணி மயிலில் ஏறினீரோ (1) உலகமனைத்தும் வயிற்றினுள் உள்ளதை அறிவிக்கவே பெரும் வயிறு கொண்டீரோ! கருணைக்கடலே உம்மைக் கண்டு கேலி செய்த சந்திரனை அடிக்கமுற்பட்ட உம்மை சமாதானப்படுத்த (சந்திரனின் மனைவியரான) நட்சத்திரங்கள் பூவுருவில் வழிபடுகின்றனரோ? அம்பிகை மணாளன் உலகை* முன்னேற்றுவதற்கு ஸ்ரீ கணபதியின் சாதுர்யம் தேவையெனக் கோகர்ணத்தில் குடி கொண்டுள்ளார். அந்த விக்னேசரை வணங்குகிறேன்.

(மூவாட்டுப் புழாவில்)

ஜநநீம்ருகயது மாமித்யாச்சாத்யாத்மஸ்வரூபமீஶதநு:
பாஸி கிரிஜாத்மஜ த்வம் கிம் கரிவரவதந மே ப்ரூஹி.

*தாய் தன்னைத் தேடட்டும் எனத் தன்னை ஈசனின் வடிவில் மறைத்துக் கொண்டு விளங்குகிறீரோ! மலைமகளின் புதல்வரே! யானை முகத்தோனே! சொல்லும் (5)*

*(காலடி க்ஷேத்திரத்தில்)*

அஶ்வத்ததோऽயம் ப்ரபஞ்சோ நஹி கலு ஸுகலேஶோऽப்யத்ர
தஸ்மாத் ஜிஹாஸ்யோ

லோகா இத்யாதரேண ப்ரணத பயஹரோ வாரணாக்ர்யாஸ்ய ஏஷ: ।
போதாயைவஸ்வயம் கிம் வஸதி த்ருடதரா ஶ்வத்தமூலே க்ருபாளு:
நாஹம் ஜாநாமி யூயம் வதத புதவரா: கிம் ததா சாந்யதாவா (6)

*நாம் காண்கிற உலகம் நாளையிருக்காது (நிலையற்றது) அதனால் எள்ளளவும் சுகமில்லை. ஆதனால் காட்சிப் பொருள் அனைத்தும் தவிர்க்கத்தக்கவையே. இதனை உணர்த்துவதற்கென்றே அந்த கிருபை மிக்கவர், திடமான அசுவத்தத்தின் (அரசமரத்தின்) கீழ் அமர்ந்துள்ளாரோ? நானறியேன். அறிவாளிகளே நீங்கள் கூறுங்கள். அப்படியா? அல்லது வேறு நிலையிலா. (ஸ்ரீஸதாசிவாபிநவ ந்ருஸிம்ஹ பாரதீஸ்வாமிகள்.)*

# श्रीगणपतिस्तुतिः

गजमुख दानव खिन्न बुधस्तुति हृष्टमहेश्वर शैलसुता-
नयनसमीक्षित तारसमुद्गत नागयुगोदित दिव्यतनो।
श्रुतिशिखरस्तुत विघ्ननिवारक कुंभमुनिस्तुत विश्वतनो
गणप गणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते॥ १॥

जलनिधिपान समर्थघटोद्भव हस्तकमण्डलुसक्तनदी-
हरणकृते धृत निर्भगवायस विप्रवटूत्तम रूप विभो।
नृपतिवरेण्य कवेरसुताजल वर्धितदक्षिणदेश निधे
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते॥ २॥

कलिमलनाशन गोश्रुतिनामक पुण्यफलप्रद भूमितले
दशवदनार्पित पूज्यमहेश्वर लिङ्गनिधान सुलब्ध यशः।
पुरहर लिङ्गसमुद्धरणक्षत रावणदर्शन हृष्टमते
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते॥ ३॥

मनुजवपुस्थित हृद्यचतुर्दल पद्मगतालय रक्ततनो
गुडकदलीफल मोदकलड्डुक भक्ष्यवरादन जातरुचे।
पृथुतम मूषकवाहन भारतलेखनदक्षिण सूक्ष्ममते
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते॥ ४॥

अरुणसरोरुह मध्यतलस्थित वल्लभयाश्रित दिव्यतनो
शरसृणिपाशशरास विभूषित पाणिचतुष्टय शोभितनो।
पुरहरविष्णुविधीन्द्रसमर्चित पादपयोरुह देहि शुभं
गणपगणेश्वर सर्वजनप्रिय सिद्धिपते जय बुद्धिपते॥ ५॥

दुष्कामं विकटो विनाशयतु मे क्रोधं च लम्बोदरो
लोभं मत्तगजाननो मदममन्दं चैकदन्तो महान्।
मोहं मान्यमहोदरोपि ममतामिष्टार्थदो विघ्नराट्
मात्सर्यं शुभवक्रतुण्डगणपोऽहन्तां च धूम्रप्रभः॥ ६॥

शुण्डादण्डसमुज्ज्वला तव विभो रम्या गजास्याकृतिः
त्वामोङ्कारमनन्तमक्षरमहो ब्रूते हि निस्संशयम्।
हस्ताः पञ्च महागणेश सकलाभीष्टप्रदास्ते नृणां
ताराङ्गानि शुभप्रदानि कलये पञ्चाक्षराणि स्फुटम्॥ ७॥

सिद्धिः स्वर्णसमा हिता च गृहिणो, ख्याता हि बुद्धिः परा
कुन्देन्दुस्फटिकाकृतिः, तव सुतौ श्रीलक्ष - लाभाभिधौ।
संतोषिण्यभिधा सुता प्रभजतां संतोषदा सर्वदा
स्वानन्दाख्यपुरे स्थितिस्तव विभो गार्हस्थ्यमन्यादृशम्॥ ८॥

ब्रह्मा लोकं सृजति हरति त्र्यम्बकः पाति विष्णुः
भाभिर्भानुर्भुवनमखिलं भासयत्यम्बिका च।
धर्मार्थादीन्वितरति सदा यत्कृपालेशलाभात्
वन्दे नित्यं विबुधविनुतं ब्रह्मणां प्रेरकं तम्॥ ९॥

## ஸ்ரீ கணபதி ஸ்துதி

கஜமுகதானவகின்னபுதஸ்துதி ஹ்ருஷ்டமஹேச்வர சைலஸுதா
நயனஸமீக்ஷித தாரஸமுத்கத நாகயுகோதித திவ்யதனோ।
ச்ருதிசிகரஸ்துத விக்னநிவாரக கும்பமுனிஸ்துத விச்வதனோ
கணபகணேச்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே॥

ஜலநிதிபாநஸமர்த்தகடோத்பவ ஹஸ்தகமண்டலு ஸக்தநதீ
ஹரணக்ருதே த்ருத நிர்பயவாயஸ விப்ரவடுத்தமரூப விபோ।
ந்ருபதிவரேண்ய கவேரஸுதாஜல வர்த்தித தக்ஷிணதேஶ நிதே
கணபகணேஶ்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே॥

கலிமலநாஶன கோஶ்ருதிநாமக புண்ய பலப்ரத பூமிதலே
தசவதனார்பித பூஜ்யமஹேச்வர லிங்கநிதான ஸுலப்த்த யஶ:।
புரஹர லிங்கஸமுத்தரணக்ஷத ராவணதர்ஶன ஹ்ருஷ்டமதே
கணபகணேஶ்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே॥

மனுஜவபுஸ்ஸ்த்தித ஹ்ருத்யசதுர்தள பத்மகதாலய ரக்ததனோ
குடகதளீபல மோதகலட்டுக பக்ஷ்யவராதன ஜாதருசே।
ப்ருதுதம மூஷகவாஹன பாரதலேகனதக்ஷிண ஸூக்ஷ்மமதே
கணப கணேச்வர ஸர்வஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே॥

அருணஸரோருஹமத்த்யதலஸ்திதவல்லபயாஶ்ரித திவ்யதனோ
ஶரஸ்ருணிபாஶபாஶ விபூஷித பாணிசதுஷ்டய ஶோபிதனோ ।
புரஹரவிஷ்ணு விதீந்த்ர ஸமர்ச்சித பாதபயோருஹ தேஹி சுபம்
கணபகணேஶ்வர ஸர்வ ஜனப்ரிய ஸித்திபதே ஜய புத்திபதே ॥

துஷ்காமம் விகடோ விநாஶயது மே க்ரோதம் ச 'லம்போதரோ
லோபம் மத்தகஜானனோ மதமமந்தம் சைகதந்தோ மஹான் ।
மோஹம் மான்யமஹோதரோபி மமதாமிஷ்டார்த்ததோ விக்னராட்
மாத்ஸர்யம் சுபவக்ரதுண்ட கணபோऽஹந்தாம் ச தூம்ரப்ரப: ॥

ஶுண்டாதண்டஸமுஜ்ஜ்வலா தவ விபோ ரம்யா கஜாஸ்யாக்ருதி:
த்வாமோங்காரமனந்தமக்ஷரமஹோ ப்ரூதே ஹி நிஸ்ஸம்ஶயம்
ஹஸ்தா: பஞ்ச மஹாகணேச ஸகலாபீஷ்டப்ரதாஸ்தே ந்ருணாம்
தாராங்கானி சுபப்ரதானி கலயே பஞ்சாக்ஷராணி ஸ்புடம் ॥

ஸித்திஸ் ஸ்வர்ணஸமா ஹிதாச க்ருஹிணீ க்யாதாஹி புத்தி: பரா
குந்தேந்துஸ்படிகாக்ருதி: தவஸுதௌ ஸ்ரீலக்ஷலாபாபிதௌ ।
ஸந்தோஷிண்யபிதா ஸுதா ப்ரஜபதாம் ஸந்தோஷதா ஸர்வதா
ஸ்வாநந்தாக்க்ய புரே ஸ்திதிஸ்தவ விபோ கார்ஹஸ்த்த்யமன்யா த்ருசம் ॥

ப்ரம்ஹா லோகம் ஸ்ருஜதி ஹரதி த்ரியம்பக: பாதி விஷ்ணு:
பாபிர்பானுர் புவனமகிலம் பாஸயத்யம்பிகா ச ।
தர்மார்த்தாதீன் விதரதி ஸதா, யத்க்ருபாலேசலாபாத்
வந்தே நித்யம் விபுத விநுதம் ப்ரம்ஹணாம் ப்ரேரகம் தம் ॥

*கஜமுகன் என்ற அசுரனால் கஷ்டமடைந்த தேவர்களுடைய ஸ்துதியினால் மகிழ்ந்த பார்வதீ பரமேச்வரர்களுடைய கண்களால் பார்க்கப்பட்ட ப்ரணவத்தினின்றும் வெளிவந்த (ஆண் பெண்) யானைகளிடமிருந்து தோன்றிய திவ்ய சரீரங் கொண்டவர் உபநிஷத்துக்களால் (அதர்வசீர்ஷம் முதலியவற்றால்) துதிக்கப்பட்டவர். விக்னங்களைப் போக்குபவர், அகத்திய முனிவரால் போற்றப்பட்டவர், உலகையே சரீரமாய்க் கொண்டவர் கணாதிபர்களுக்கெல்லாம் தலைவர் அனைவருக்கும் அன்பர். அந்த ஸ்ரீஸித்திபுத்தி ஸமேத ஸ்ரீமஹாகணபதியே வெற்றியுடன் விளங்குவீராக.*

*கடலைக் குடித்த அகத்திய முனிவரின் கையிலிருக்கும் கமண்டலத்திலுள்ள காவேரி நதியை கொண்டு வருவதற்காக பயமற்ற - காக்கை - பிரம்மச்சாரி இவர்களின் உருவத்தைக் கொண்டவர், கவேர மன்னனின் பெண்ணாகிய காவேரியின்*

ஜலத்தால் தென்னாட்டின் செல்வத்தைச் செழிக்கச் செய்தவர், ஸ்ரீ ஸித்தி புத்தி ஸமேத மஹாகணபதியே வெற்றியுடன் விளங்குவீராக.

கலிதோஷம் போக்கும் கோகர்ணம் என்ற புண்ணியம் நல்கும் பூமியில் ராவணனால் கொடுக்கப்பட்ட பூஜிக்கத் தகுந்த சிவலிங்கத்தை (கோகர்ணத்திலே) ப்ரதிஷ்டை செய்ததால் புகழ் பெற்றவரும், சிவலிங்கத்தை மீண்டும் பெயர்த்தெடுப்பதில் தோல்வியுற்ற ராவணனைக் கண்டு மகிழ்ச்சியுற்றவருமான ஸ்ரீஸித்திபுத்தி ஸமேதமஹாகணபதே வெற்றியுடன் விளங்குவீராக.

மனுஷ்ய சரீரத்தில் அழகிய நான்கு இதழ்கள் கொண்ட தாமரை மலரை (மூலாதாரத்தில்) இருப்பிடமாகக் கொண்டவர், சிவந்த மேனியர், வெல்லம், வாழைப்பழம் மோதகம், இட்லி முதலிய உயர்ந்த பக்ஷணங்களை சாப்பிடுவதில் ஆசையுடையவர். மிகப்பெரிய மூஞ்சூறை வாஹனமாகக் கொண்டவர், மஹாபாரதம் எழுதுவதில் வல்லுனர், நுண்ணிய அறிவுடையவர் இந்த ஸ்ரீ ஸித்தி புத்தி ஸமேத மஹாகணபதியே வெற்றியுடன் விளங்குவீராக.

செந்தாமரைப் பூவின் நடுவில் வீற்றிருப்பவர், ஸ்ரீ வல்லபா தேவியால் அணைத்துக் கொள்ளப்பட்ட திவ்ய தேஹமுடையவர் அம்பு அங்குசம் பாசம் வில் இவைகளால் அலங்கரிக்கப்பட்ட நான்கு கரங்களுடையவர், சிவன், விஷ்ணு ப்ரம்ஹா, இந்த்ரன் இவர்களால் பூஜிக்கப் பெற்றவர் இந்த ஸ்ரீ ஸித்திபுத்தி ஸமேத மஹாகணபதியே எனக்கு மங்களம் அருளி வெற்றியுடன் விளங்குவீராக.

ஸ்ரீ விகடவிநாயகர் காமத்தையும், லம்போதரர் க்ரோதத்தையும், கஜானனர் லோபத்தையும், ஏகதந்தர் மதத்தையும், மஹோதரர் மோஹத்தையும் விக்னராஜர் மமதையையும், வக்ரதுண்டர் மாத்ஸர்யத்தையும், தூம்ரவர்ணர் அகந்தையையும் எனக்கு போக்கியருளட்டும்.

விபோ! துதிக்கையுடன் கூடிய அழகிய தங்களுடைய யானை முக உருவம் தங்களை அழிவற்ற ஓங்காராக்ஷரமாகவே ஸந்தேஹமின்றிக் கூறுகின்றது. ஸ்ரீமஹாகணபதே! ஜனங்களுக்கு எல்லா விருப்பங்களை நல்கும் தங்களுடைய

ஐந்து கரங்களையும் மங்களமருளும் ஓங்காரத்தின் அவயவங்களான பஞ்சாக்ஷரங்களாகவே நான் கருதுகிறேன் (பிரணவத்தில் அ.உ.ம நாதம் பிந்து என்ற ஐந்து அக்ஷரங்கள் இருக்கின்றன).

விபோ கணபதே! தங்களுக்கு இரு மனைவியர், ஒருவள் பொன்னிறமுடையவள். மற்றவள் குந்தமலர், சந்திரன் ஸ்படிகம் போன்ற வெண்ணிறமுடையவள். தங்கள் இரு புதல்வர்கள் லக்ஷனும் லாபனும், தன்னை வழிபடுபவர்க்கு மகிழ்ச்சியளிப்பவள் தங்கள் பெண் சந்தோஷிணி என்ற பெயரினள். தங்கள் வாசம் நிரந்தரமாக ஸ்வானந்தபுவனம் என்ற பட்டினத்தில். ஆகவே தங்களுடைய க்ருஹஸ்தாசிரமம் தனித்தன்மை வாய்ந்ததாகும்.

எவருடைய கிருபையின் காரணமாக பிரமன் உலக சிருஷ்டியையும் ருத்ரன் ஸம்ஹாரத்தையும், விஷ்ணு ஸம்ரக்ஷணத்தையும் செய்கின்றரோ, சூர்யனும் அகில உலகங்களையும் தன் ஒளியினால் ப்ரகாசப்படுத்துகிறனோ, அம்பிகையும் தர்மம் அர்த்தம் முதலியவற்றை அளிக்கின்றளோ, அவர்களைத் தங்கள் தங்கள் பணிபுரியத் தூண்டுகிற கணேசரை வணங்குகிறேன்.

## ॥ श्रीमहागणपतिनवार्णवेदपरदस्तवः ॥

श्रीकण्ठतनय श्रीश श्रीकर श्रीदलार्चित ।
श्रीविनायक सर्वेश श्रियं वासय मे कुले ॥ १ ॥
गजानन गणाधीश द्विजराजविभूषित ।
भजे त्वां सच्चिदानन्द ब्रह्मणां ब्रह्मणस्पते ॥ २ ॥
णषष्ठवाच्यनाशाय रोगाटविकुठारिणे ।
घृणापालितलोकाय वनानां पतये नमः ॥ ३ ॥
धियं प्रयच्छते तुभ्यमीप्सितार्थप्रदायिने ।
दीप्तभूषणभूषाय दिशां च पतये नमः ॥ ४ ॥
पञ्चब्रह्मस्वरूपाय पञ्चपातकहारिणे ।
पञ्चतत्त्वात्मने तुभ्यं पशूनां पतये नमः ॥ ५ ॥

तटित्कोटिप्रतीकाशतनवे विश्वसाक्षिणे।
तपःस्वाध्यायिने तुभ्यं सेनानिभ्यश्च वो नमः ॥ ६ ॥
ये भजन्त्यक्षरं त्वां ते प्राप्नुवन्त्यक्षरात्मताम्।
नैकरूपाय महते मुष्णतां पतये नमः ॥ ७ ॥
नगजावरपुत्राय सुरराजार्चिताय च।
सुगुणाय नमस्तुभ्यं सुमृडीकाय मीढुषे ॥ ८ ॥
महापातकसङ्घातमहारणभयापह।
त्वदीयकृपया देव सर्वानव यजामहे ॥ ९ ॥
नवार्णरत्ननिगमपादसंपुटितां स्तुतिम्।
भक्त्या पठन्ति ये तेषां तुष्टो भव गणाधिप ॥ १० ॥

## ஸ்ரீ மஹாகணபதி நவார்ண வேதபாத ஸ்தவம்

ஸ்ரீ கண்ட்டதநய ஸ்ரீஶ ஸ்ரீகர ஸ்ரீதளார்ச்சித ।
ஸ்ரீவிநாயக ஸர்வேஶ ஶ்ரியம் வாஸய மே குலே ॥
கஜாநந கணாதீச த்விஜராஜவிபூஷித ।
பஜே த்வாம் ஸச்சிதாநந்த ப்ரஹ்மணாம் ப்ரஹ்மணஸ்பதே ॥
ணஷஷ்ட்ட வாச்யநாசாய ரோகாடவிகுடாரிணே ।
க்ருணாபாலிதலோகாய வநாநாம் பதயே நம: ॥
தியம் ப்ரயச்சதே துப்ப்யம் ஈப்ஸிதார்த்தப்ரதாயிநே ।
தீப்த - பூஷண - பூஷாய திஶாம் ச பதயே நம: ॥
பஞ்ச ப்ரம்ஹ ஸ்வரூபாய பஞ்சபாதக - ஹாரிணே
பஞ்ச தத்வாத்மநே துப்ப்யம் பஶூநாம் பதயே நம: ॥
தடித்கோடிப்ரதீகாஶதநவே விஶ்வஸாக்ஷிணே ।
தபஸ்ஸ்வாத்யாயிநே துப்ப்யம் ஸேநாநிப்ப்யஶ்ச வோ நம: ॥
யே பஜந்த்யக்ஷரம் த்வாம் தே ப்ராப்நுவந்த்யக்ஷராத்மதாம் ।
நைகரூபாய மஹதே முஷ்ணதாம் பதயே நம: ॥
நகஜா-வர-புத்ராய ஸுரராஜார்ச்சிதாய ச ।
ஸுகுணாய நமஸ் துப்ப்யம் ஸும்ருடீகாய மீடுஷே ॥
நவார்ண - ரத்ந - நிகமபாத - ஸம்புடிதாம் ஸ்துதிம் ।
பக்த்யா படந்தி யே தேஷாம் துஷ்டோ பவ கணாதிப ॥

விஷமுண்டகண்டரின் புதல்வரே! லக்ஷ்மீநாதரே! செல்வத்தை அளிப்பவரே! வில்வ இதழ்களால் பூஜிக்கப் பெற்றவரே! எல்லோருக்கும் தலைவரே! விநாயகக் கடவுளே! என் வம்சத்தில் லக்ஷ்மியைக் கணமும் அகலாமல் வீற்றிருக்கச் செய்வீராக. (விநாயகரின் சக்திக்கு மஹாலக்ஷ்மி என்று பெயர்).

யானை முகத்தோனே! கணங்களின் தலைவரே! சந்திரனால் அலங்கரிக்கப் பெற்றவரே! பேரிருக்கையும் பேரறிவும் பேரானந்தமும் வடிவானவரே! படைப்புக் கடவுளருக்கும் வேதங்களுக்கும் தலைவரே! தங்களையே வழிபடுகிறேன்.

'ண' என்ற எழுத்திலிருந்து ஆறுவது எழுத்தான 'ந' என்ற எழுத்தின் பொருளான இல்லாமையை (வறுமையை) ஒழிப்பவரும் பிணிகளாகிய காட்டைக் கோடரி போல் அழிப்பவரும், *பரிவினால் உலகைக் காக்கின்றவரும், காடுகளுக்கெல்லாம் தலைவருமான கணபதிக்கு நமஸ்காரம்.

நல்ல அறிவைக் கொடுப்பவரும் விரும்பிய பொருளை அளிப்பவரும் ஒளிமிக்க அணிகளால் அலங்கரிக்கப் பெற்றவரும், திசைகளின் தலைவருமான தங்களுக்கு நமஸ்காரம்.

ஸத்யோஜாதர், வாமதேவர், அகோரர், தத்புருஷர், ஈசானர் என்ற ஐந்து ப்ரஹ்மங்களாக இருப்பவரும், அந்தணனைக் கொல்லுதல், கள்குடித்தல், களவாடுதல், குருவின் மனைவியுடன் கூடுதல், இந்தப் பாவங்களைச் செய்பவர்களுடன் சேருதல் - ஆகிய ஐந்து மகா பாதகங்களையும் அழிப்பவரும், விண் காற்று தீ நீர் மண் ஆகிய ஐந்து பூதங்களின் வடிவமாக இருப்பவரும், பசுக்களின் தலைவருமான தங்களுக்கு வந்தனம்.

கோடி மின்னலுக்கு ஒப்பான ஒளிமிகுந்த உடல் உடையவரும், அனைத்து உலகிற்கும் ஸாக்ஷியாக இருப்பவரும், தவமும் வேதமோதுதலும் செய்பவரும் படைகளின் தலைவருமான தங்களுக்கு நமஸ்காரம்.

அழிவற்ற தங்களை வழிபடுகிறவர்கள் அழிவற்றவராகி விடுகின்றனர். பல ரூபங்களை எடுப்பவரும் பெருமை மிக்கவரும், திருடர்களுக்குத் தலைவராக இருப்பவருமான தங்களுக்கு நமஸ்காரம்.

பார்வதி தேவியின் சிறந்த புதல்வரும், தேவேந்திரனால் பூஜிக்கப் பெற்றவரும், நற்குணம் பொருந்தியவரும், எல்லோருக்கும் எப்பொழுதும் இன்பங்களை அன்புடன் வழங்குகிற வள்ளலுமான தங்களுக்கு நமஸ்காரம்.

பெரும்பாவக் கூட்டத்திலிருந்தும் பெரிய யுத்தத்திலிருந்தும் ஏற்படும் அச்சத்தை நீக்குபவரே! தேவரே தங்களது பேரருளால் எல்லோரையும் காப்பாற்றுவீராக. தங்களை வழிபடுகின்றோம்.

கம் ஸ்ரீ கணாதிபதயே நம: என்ற மந்த்ரத்தில் ஒவ்வொரு அக்ஷரத்தை ஆரம்பத்திலும் வேத வாக்கியங்களை நான்காம் பாதத்திலும் கொண்ட ஸ்தோத்திரத்தைப் படிப்பவர்களிடம் ப்ரியம் காட்டுவீர்.

# विनायकलीलास्तुतिः

नमामि देवं सकलार्थदं तं सुवर्णवर्णं भुजगोपवीतम्।
गजाननं भास्करमेकदन्तं लम्बोदरं वारिभवासनं च॥ १

केयूरिणं हारकिरीटजुष्टं चतुर्भुजं पाशवराभयानि।
सृणिं वहन्तं गणपं त्रिणेत्रं सचामरस्त्रीयुगलेन युक्तम्॥ २

षडक्षरात्मानमनल्पभूषं मुनीश्वरैर्भार्गव पूर्वकैश्च।
संसेवितं देवमनाथकल्परूपं मनोज्ञं शरणं प्रपद्ये॥ ३

वेदान्तवेद्यं जगतामधीशं देवादिवन्द्यं सुकृतैकगम्यम्।
स्तंबेरमास्यं नवचन्द्रचूडं विनायकं तं शरणं प्रपद्ये॥ ४

भवाख्यदावानलदह्यमानं भक्तं स्वकीयं परिषिञ्चते यः।
गण्डस्रुतांभोभिरनन्यतुल्यं वन्दे गणेशं च तमालनीलम्॥ ५

शिवस्य मौलाववलोक्य चन्द्रं स्वशुण्डया मुग्धतया स्वकीयम्।
भग्नं विषाणं परिभाव्य चित्ते आकृष्टचन्द्रो गणपोऽवतान्नः॥ ६

पितुर्जटाजूटतटे विलोक्य भागीरथीं तत्र कुतूहलेन।
विहर्तुकामः स महीध्रपुत्र्या निवारितः पातु सदा गजास्यः॥ ७

लम्बोदरो देवकुमारसिद्धैः क्रीडन् कुमारं जितवान्निजेन।
करेण चोत्तोल्य ननर्त रम्यं दन्तावलास्यो भयतः स पायात्॥ ८

आगत्य चोच्चैः हरिनाभिपद्मं ददर्श तत्राशु करेण तच्च।
उद्धर्तुमिच्छन्विधिचाटुवाक्यं श्रुत्वा मुमोचावतु नो गणेशः॥ ९॥

निरन्तरं संस्कृतदानपट्टे लग्नां तु गुञ्जद्भ्रमरावलिं वै।
तां श्रोत्रतालैरपसारयन्तं भजे गजास्यं निजहृत्सरोजे॥ १०

विश्वेशमौलिस्थितजह्नुकन्याजलं गृहीत्वा निजपुष्करेण।
हरं सलीलं पितरं स्वकीयं प्रपूजयन्हस्तिमुखः स पायात्॥ ११

स्तंबेरमास्यं घुसृणाङ्गरागं सिन्दूरपूरारुण कान्तकुम्भम्।
कुचन्दनालिप्तकरं गणेशं ध्यायामि चित्ते सकलेष्टदं तम्॥ १२

स भीष्ममातुर्निजपुष्करेण जलं समादाय कुचौ स्वमातुः।
प्रक्षालयामास षडास्यपीतौ स्वार्थं मुदेऽसौ कलभाननोऽस्तु॥ १३

तं वामनाङ्गं शिशुभावमात्तं केनापि सत्कारणतो धरित्र्याम्।
वक्रारमाद्यं निगमादिकानां लोकैकवन्द्यं प्रणमामि विघ्नम्॥ १४

आलिङ्गितं चारुरुचा मृगाक्ष्या संभोगलोलं मदविह्वलाङ्गम्।
विघ्नौघविध्वंसनसक्तमेकं नमामि कान्तद्विरदाननं तम्॥ १५

हेरम्ब उद्यद्रविकोटिकान्तः पञ्चाननेनाप्यवलंबितांसः।
मुनीन्सुरान्भक्तजनांश्च सर्वान् स पातु रथ्यासु सदा गजास्यः॥ १६

द्वैपायनोक्तं सुविचार्य येन स्वदन्तकोटचा निखिलं लिखित्वा।
दत्तं पुराणं सुतमिन्दुमौलेः तमग्ररूपं मनसा स्मरामि॥ १७

क्रीडाप्रवृत्ते जलधाविभास्ये वेलाजलेऽथाम्बुपतिः प्रभीतः।
विचिन्त्य कस्येति सुरास्तदा तं विश्वेश्वरं वाग्भिरभिष्टुवन्ति॥ १८

वाचां निमित्तं ह्यनिमित्तमाद्यं पदं त्रिलोक्यां निखिलस्तुतीनाम्।
सर्वैश्च वन्द्यो न च तस्य वन्द्यः स्थाणोः परं रूपमसौ स पायात्॥ १९

इमां स्तुतिं यः पठतीह भक्त्या समाहितप्रीतिरतीव शुद्धः ।
संसेव्यते चेन्दिरया नितान्तं दारिद्र्यसङ्घं स विदारयेन्नः ॥ २० ॥

## விநாயகலீலாஸ்துதி:

நமாமிதேவம் ஸகலார்த்ததம் தம் ஸுவர்ணவர்ணம் புஜகோபவீதம்
கஜாநநம் பாஸ்கரமேகதந்தம் லம்போதரம் வாரிபவாஸநம் ச 1

கேயூரிணம் ஹாரகிரீட ஜுஷ்டம் சதுர்ப்புஜம் பாஶவராபயாநி.
ஸ்ருணிம் வஹந்தம் கணபம் த்ரிநேத்ரம் ஸசாமர ஸத்ரீயுகளேந யுக்தம் 2

ஷடக்ஷராத்மாந மநல்ப பூஷம் முநீஶ்வரை: பார்க்கவபூர்வகைஶ்ச.
ஸம்ஸேவிதம் தேவமநாதகல்ப ரூபம் மநோஜ்ஞம் ஶரணம் ப்ரபத்யே 3

வேதாந்த வேத்யம் ஜகதாமதீஶம் தேவாதிவந்த்யம் ஸுக்ருதைககம்யம்
ஸ்தம்பேரமாஸ்யம் நவசந்த்ரசூடம் விநாயகம் தம் ஶரணம் ப்ரபத்யே 4

பவாக்க்ய தாவாநல தஹ்யமாநம் பக்தம் ஸ்வகீயம் பரிஷிஞ்சதே ய:
கண்டஸ்ருதாம்போபிரநந்யதுல்யம் வந்தே கணேஶம் ச தமால நீலம் 5

ஶிவஸ்ய மௌளாவவலோக்ய சந்த்ரம் ஸ்வஶுண்டயா முக்த்ததயா ஸ்வகீயம்
பக்ந்நம் விஷாணம் பரிபாவ்ய சித்தே ஆக்ருஷ்டசந்த்ரோ கணபோऽவதாந்ந: 6

பிதுர்ஜடாஜூடதடே விலோக்ய பாகீரதீம் தத்ர குதூஹலேந
விஹர்துகாமஸ்ஸ மஹீந்த்ரபுத்ர்யா நிவாரித: பாது ஸதாகஜாஸ்ய: 7

லம்போதரோ தேவகுமாரஸங்க்கை: க்ரீடந் குமாரம் ஜிதவாந் நிஜேந.
கரேணசோத்தோல்ய நநர்த ரம்யம் தந்தாவலாஸ்யோ பயதஸ் ஸ பாயாத் 8

ஆகத்யசோச்சை: ஹரிநாபிபத்மம் ததர்ஶ தத்ராஶு கரேண தச்ச
உத்த்தர்துமிச்சந் விதிசாடுவாக்யம் ஶ்ருத்வா முமோசாவது நோ கணேஶ: 9

நிரந்தரம் ஸம்ஸ்க்ருததாநபட்டே லக்நாம் து குஜ்ஞத்ப்ப்ரமாவளிம் வை.
தாம் ஶ்ரோத்ர தாளைரபஸாரயந்தம் பஜே கஜாஸ்யம் நிஜஹ்ருத் ஸரோஜே 10

விஶ்வேஶமௌளிஸ்த்தித ஜஹ்நுகந்யா ஜலம் க்ருஹீத்வா நிஜபுஷ்கரேண
ஹரம் ஸலீலம் பிதரம் ஸ்வகீயம் ப்ரபூஜயந் ஹஸ்திமுக: ஸபாயாத் 11

ஸ்தம்பேரமாஸ்யம் குஸ்ருணாருணாங்கம் ஸிந்தூரபூராருண காந்த கும்ப்பம்
குசந்தநாலிப்தகரம் கணேஶம் த்த்யாயாமி சித்தே ஸகலேஷ்டதம் தம் 12

ஸபீஷ்மமாதுர் நிஜபுஷ்கரேண ஜலம் ஸமாதாய குசௌ ஸ்வமாது:
ப்ரக்ஷாலயாமாஸ ஷடாஸ்யபீதௌ ஸ்வார்த்தம் முதேऽஸௌ கலபாநநோஸ்து 13

தம் வாமநாங்கம் ஶிஶுபாவமாப்தம் கேநாபி ஸத்காரணதோ'தரித்ர்யாம்
வக்த்ரமாத்யம் நிகமாதிகாநாம் லோகைக வந்த்யம் ப்ரணமாமி விக்க்நம் 14

ஆலிங்கிதம் சாருருசா ம்ருகாக்ஷ்யா ஸம்ப்போகலோலம் மதிவிஹ்வலாங்கம்
விக்நௌக வித்த்வம்ஸநஸக்தமேகம் நமாமி காந்தத்விரதாநநம் தம் 15

ஹேரம்ப உத்யத்ரவிகோடிகாந்த: பஞ்சாநநேநாப்யவலம் பிதாம்ஸ:
முநீந் ஸுராந் பக்தஜநாம்ஶ்ச ஸர்வாந் ஸபாது ரத்த்யாஸு ஸதா கஜாஸ்ய: 16

த்வைபாயநோக்தம் ஸுவிசார்ய யேந ஸ்வதந்தகோட்யா நிகிலம் லிகித்வா.
தத்தம் புராணம் ஸுதமிந்துமௌளே: தமக்ர்யரூபம் மநஸா ஸ்மராமி 17

க்ரீடாப்ரவ்ருத்தே ஜலதாவிபாஸ்யே வேலாஜலேதாம்புபதி: ப்ரபீத:
விசிந்த்ய கஸ்யேதி ஸுராஸ்த்ததா தம் விஶ்வேஶ்வரம் வாக்ப்பிரபிஷ்டுவந்தி. 18

வாசாம் நிமித்தம் ஹ்யநிமித்தமாத்யம் பதம் த்ரிலோக்யாம் நிகிலஸ்துதீநாம்
ஸர்வைஶ்ச வந்த்யோ நசதஸ்ய வந்த்ய: ஸ்த்தாணோ: பரம் ரூபமஸௌ ஸபாயாத். 19

இமாம் ஸ்துதிம் ய: படதீஹ பக்த்யா ஸமாஹிதப்ரீதிரதீவ ஶுத்த்த:
ஸம்ஸேவ்யதே சேந்திரயா நிதாந்தம் தாரித்ர்ய ஸங்க்கம் ஸ விதாரயேந்ந: 20

*தேவர், விரும்பியதனைத்தையும் தருபவர், தங்க நிறம் கொண்டவர், பாம்பைப் பூணூலாக்கியவர். யானை முகத்தவர் பேரொளியினர், சரிந்த வயிறுடையவர், தாமரை மீதமர்ந்தவர் (1) தோள் வளை, ஹாரம் கிரீடம், அணிந்தவர் நான்கு கைகளில் பாசம் வரம் அபயம் துறட்டி ஏந்தியவர். முக்கண்ணர், இருபுறமும் இரு பெண்களால் சாமரம் வீசப்பட்டவர். இவரை வணங்குகிறேன் (2) ஆறு அக்ஷரவடிவினர், எண்ணற்ற அணிகள் அணிந்தவர், சுகர் முதலிய ருஷிகளால் வழிபடப்பெற்றவர், தேவர், நாடுதலற்றவர், அழகிய வடிவினர், இவரைச் சரணமடைகிறேன். (3) உபநிஷதின் உட்பொருள், உலகின் ஈசன், தேவர் முதலானோரால் வணங்கப் பெற்றவர், புண்யத்தால் மட்டும் உணரத்தக்கவர், யானை முகத்தவர், புதிய சந்த்ரனைச் சிரசில் அணிந்தவர், நாயகனற்றவர், இவரைச் சரணடைகிறேன் (4)*

*பிறப்புறப்புத்தீயில் வாடுகிற தன் பக்தனை தன் மதநீரால் நனைத்துக் குளிர வைக்கிற இணையற்றவரை பச்சிலை போல் பசுமை நிறத்தரை கணேசரை வணங்குகிறேன் (5) சிவபெருமானது தலையில் பிறைச் சந்த்ரனைக் கண்டதும்,*

*துதிக்கையில் தன் ஒடிந்த தந்தப் பகுதியைத் தடவி ஏக்கத்தால் பிறையை இழுக்கின்ற கணபதி காக்கட்டும் (6) தந்தையின் சடையில் கங்கையைக் கண்ட ஆர்வத்தால் அதில் இறங்கி விளையாடத் தொடங்கியதும் பார்வதியால் தடுத்து நிறுத்தப்பட்ட கணபதி எப்போதும் காப்பாராக. (7) தேவர்ச்சிறுவர்களுடன் விளையாடத் தொடங்கிய போது கந்தனை வென்று தம் கைகளால் கந்தனைத் தூக்கி குலுக்கிக் கூத்தாடுகிற கணபதி பயத்திலிருந்து காப்பாராக (8)*

*ஹரியின் மீதேறி அவரது தொப்புளில் முளைத்துள்ள தாமரையைப் பிடுங்க முற்பட்டதும் (தாமரை மீதமர்ந்த) பிரும்மாவின் கெஞ்சலைக் கேட்டுத் தாமரையை விட்ட கணேசர் நம்மைக் காக்கட்டும் (9) ஒய்வின்றி தூயதாக்கப்பட்ட கன்னத்தில் மதநீர்க்கசிவில் மொய்க்கின்ற வண்டுகளைத் தன் காதுமடல் களால் விரட்டுகின்ற கணேசரை இதயத்தாமரையில் வழிபடுகிறேன் (10) சிவபெருமானின் தலையிலுள்ள கங்கை நீரைத் தும்பிக்கையில் நிறைத்து விளையாட்டாகத் தந்தையையே நீராட்டி வழிபடுகிற கணேசர் காக்க (11) யானை முகமுள்ளவர், குங்குமப்பூ போல சிவந்த மேனியர், செந்தூரத்தால் சிவந்த மத்தகமுள்ளவர், கைகளில் சந்தனப்பூச்சுள்ளவர், விரும்பியது எல்லாம் அருள்பவர் அவரை நினைவில் கொள்ளுகிறேன் (12)*

*பீஷ்மரின் தாயான கங்கையின் நீரைத் துதிக்கையில் எடுத்து வந்து, கந்தன் குடித்ததெனத் தன் தாயின் ஸ்தனங்களைத்தான் குடிப்பதற்கென அலம்பி விடுகிற கணேசர் நமக்கு மகிழ்ச்சி அளிக்கட்டும் (13) அந்த குள்ள வடிவினர், ஏதோ நற்காரணம் கொண்டு பூமியில் பாலனாகத் தோன்றியவர், வேதம் முதலானவற்றை உலகிற்கு முதன்முதலாக அறிமுகப் படுத்தியவர், உலகின் வணக்கத்திற்குரியவர், அந்த விக்கிநேசரை வணங்குகிறேன் (14) அழகிய பெண்ணால் அணைக்கப் பெற்று இன்புற்றவர், இடையூறுகளைக் களைபவர், அந்த அழகிய யானை முகத்தவனை வணங்குகிறேன் (15) அழகிய பிளிறல் உள்ளவர், உதிக்கின்ற கோடி சூர்ய ஒளியுள்ளவர், பரமசிவனால் தோளில் தாங்கப்பட்டவர், தேவர், முனிவர், மற்றும் அடியார்களைக் காப்பவர், பெருவழிகளில் செல்கையில் அவர் என்னைக் காக்கட்டும் 16.*

*வியாசர் கூறிய மஹாபாரதத்தை உணர்ந்து தன் தந்தநுனியால் எழுதிய சிவனாரின் புதல்வர். சிறந்த அழகர், அவரை மனத்தால் உருவகப்படுத்துகிறேன் (17) கடலில் அலைமீது விளையாடத் தொடங்கியதும் விளையாடுவது யார் என்ற சிந்தனையில் கடல் நடுங்கிற்று. அவரைத் தேவர்கள் துதித்தனர். (18) எல்லாத் துதிகளுக்கும் ஏற்றவர். சொல்லின் மூலம், தனக்கு மூலமற்றவர், அனைவராலும் வணங்கத் தக்கவர், தன்னால் வணங்கத்தக்கவர் எவருமில்லாதவர். பரமசிவனின் மேலான வடிவானவர். இவர் நம்மைக் காப்பாராக. இந்தத் துதியைப் பக்தியால் சொல்பவர் லக்ஷ்மியின் இருப்பிடமாகி ஏழ்மைப் பிடியைத் தகர்ப்பர்.*

## श्रीमहागणपतिस्तोत्रम्॥

योगं योगविदां विधूतविविधव्यासङ्गशुद्धाशय-
    प्रादुर्भूतसुधारसप्रसृमरध्यानास्पदाध्यासिनाम्।
आनन्दप्लवमानबोधमधुरामोदच्छटामेदुरं
    तं भूमानमुपास्महे परिणतं दन्तावलास्यात्मना॥ १॥
तारश्रीपरशक्तिकामवसुधारूपानुगं यं विदुः,
    तस्मै स्तात् प्रणतिर्गणाधिपतये यो रागिणाऽभ्यर्थ्यते।
आमन्त्र्य प्रथमं वरेति वरदेत्यार्तेन सर्वं जनं
    स्वामिन् मे वशमानयेति सततं स्वाहादिभिः पूजितः॥ २॥
कल्लोलाञ्चलचुम्बिताम्बुदततौ इक्षुद्रवाम्बोनिधौ
    द्वीपे रत्नमये सुरद्रुभवनामोदैकमेदस्विनि।
मूले कल्पतरोर्महामणिमये पीठेऽक्षराम्भोरुहे
    षट्कोणाकलितत्रिकोणरचनासत्कर्णिकेऽमुं भजे॥ ३॥
चक्रप्रासरसाल कार्मुकगदा सद्बीजपूरद्विज-
    व्रीह्यग्रोत्पल पाशपङ्कजकरं शुण्डाग्रजाग्रद्घटम्।
आश्लिष्टं प्रियया सरोजकरया रत्नस्फुरद्भूषया,
    माणिक्यप्रतिमं महागणपतिं विश्वेशमाशास्महे॥ ४॥

दानाम्भः परिमेदुर - प्रसृमर - व्यालम्बि - रोलम्बभृत्-
सिन्दूरारुण - गण्डमण्डल - युगव्याजात् - प्रशस्तिद्वयम्।
त्रैलोक्येष्टविधानवर्णसुभगं यः पद्मरागोपमं
धत्ते स श्रियमातनोतु सततं देवो गणानां पतिः॥ ५॥
भ्राम्यन्मन्दरघूर्णनापरवशक्षीराब्धिवीचिच्छटा-
सच्छायाश्चलचामरव्यतिकरश्रीगर्वसर्वङ्कषाः।
दिक्कान्ताघनसारचन्दनरसासाराः श्रयन्तां मनः
स्वच्छन्दप्रसरप्रलिप्तवियतो हेरम्बदन्तत्विषः॥ ६॥
मुक्ताजालकरम्बितप्रविकसन्माणिक्यपुञ्जच्छटा-
कान्ताः कम्बुकदम्बचुम्बितघनाभोगप्रवालोपमाः।
ज्योत्स्नापूरतरङ्गमन्थरतरत्सन्ध्यावयस्याश्चिरं
हेरम्बस्य जयन्ति दन्तकिरणाकीर्णाः शरीरत्विषः॥ ७॥
शुण्डाग्राकलितेन हेमकलशेनावर्जितेन क्षरन्-
नानारत्नचयेन साधकजनान् सम्भावयन् कोटिशः।
दानामोदविनोद लुब्धमधुपप्रोत्सारणाविर्भवत्-
कर्णान्दोलनखेलनो विजयते देवो गणग्रामणीः॥ ८॥
हेरम्बं प्रणमामि यस्य पुरतः शाण्डिल्यमूले श्रिया
बिभ्रत्याऽम्बुरुहे समं मधुरिपुस्ते शङ्खचक्रे वहन्।
न्यग्रोधस्य तले सहाद्रिसुतया शम्भुस्तथा दक्षिणे
बिभ्राणः परशुं त्रिशूलमितया पाशाङ्कुशाभ्यां शुभम्॥ ९॥
पश्चात् पिप्पलमाश्रितो रतिपतिर्देवस्य रत्योत्पले
बिभ्रत्या सममैक्षवं धनुरिषून् पौष्पान् वहन् पञ्च च।
वामे चक्रगदाधरः स भगवान् क्रोडः प्रियङ्गोस्तले
हस्तोद्यच्छुकशालिमञ्जरिकया देव्या धरण्या सह॥ १०॥
षट्कोणाश्रिषु षट्सु षड् गजमुखाः पाशाङ्कुशाभीवरान्
बिभ्राणाः प्रमदासखाः पृथुमहाशोणाश्मपुञ्जत्विषः।

आमोदः पुरतः प्रमोदसुमुखौ तं चाभितो दुर्मुखः
पश्चात् पार्श्वगतोऽस्य विघ्न इति यो विघ्नकर्तेति च ॥ ११ ॥
आमोदादिगणेश्वरप्रियतमास्तत्रैव नित्यं स्थिताः
कान्ताश्लेषरसज्ञमन्थरदृशः सिद्धिः समृद्धिस्ततः ।
कान्तिर्या मदनावतीत्यपि तथा कल्पेषु या गीयते
सान्या याऽपि मदद्रवा तदपरा द्राविण्यमूः पूजिताः ॥ १२ ॥
आश्लिष्टौ वसुधेत्यथो वसुमती ताभ्यां सितालोहितौ
वर्षन्तौ वसु पार्श्वयोर्विलसतस्तौ शङ्खपद्मौ निधी ।
अङ्गान्यन्वथ मातरश्च परितः शक्रादयोऽब्जाश्रयाः,
तद्बाह्ये कुलिशादयः परिपतत्कालानलज्योतिषः ॥ १३ ॥
इत्थं विष्णुशिवादितत्त्वतनवे श्रीवक्रतुण्डाय हुं-
काराक्षिप्तसमस्तदैत्यपृतनाव्रताय दीप्तत्विषे ।
आनन्दैकरसावबोधलहरीविध्वस्तसर्वोर्मये
सर्वत्र प्रथमानमुग्धमहसे तस्मै परस्मै नमः ॥ १४ ॥
सेवाहेवाकिदेवासुरनरनिकरस्फारकोटीरकोटी-
कोटिव्याटीकमानद्युमणिसममणिश्रेणिभावेणिकानाम् ।
राजन्नीराजनश्रीसखचरण नखद्योतविद्योतमानः
श्रेयः स्थेयः स देयान्मम विमलदृशा बन्धुरं सिन्धुरास्यः ॥ १५ ॥
एतेन प्रकटरहस्यमन्त्रमालागर्भेण स्फुटःसंविदा स्तवेन ।
यः स्तौति प्रचुरतरं महागणेशं तस्येयं भवति वशंवदा त्रिलोकी ॥
श्रीमद्राघवचैतन्यकृतां गणपतिस्तुतिम् ।
पठतां श्रद्धया नित्यं वश्यं विश्वं न संशयः ॥ १७

## ஸ்ரீ மஹாகணபதி ஸ்தோத்ரம்

யோகம் யோகவிதாம் விதூத - விவித - வ்யாஸங்க - சுத்தாசய-
ப்ராதுர்ப்பூதஸுதாரஸப்ரஸ்ருமர - த்யாநாஸ்பதாத்த்யா ஸிநாம்।
ஆநந்த ப்லவமாந போதமதுராமோதச் சடாமேதுரம்
தம் பூமாநமுபாஸ்மஹே பரிணதம் தந்தாவளாஸ்யாத்மநா॥ 1

தாரஶ்ரீ - பரசக்தி - காம - வஸுதாரூபாநுகம் யம் விது:,
தஸ்மை ஸ்தாத் ப்ரணதிர் கணாதிபதயே யோ ராகிணா ப்ரார்த்த்யதே।
ஆமர்ந்த்ர்ய ப்ரதமம் வரேதி வரதேத்யார்த்தேந ஸர்வம் ஜநம்
ஸ்வாமிந் மே வசமாநயேதி ஸததம் ஸ்வாஹாதிபி: பூஜித:॥ 2

கல்லோலாஞ்சல - சும்பிதாம்புததெள இக்ஷுத்ரவாம்போ நிதெள
த்வீபே ரத்நமயே ஸுரத்ரும - வநாமோதைக - மேதஸ்விநி।
மூலே கல்பதரோ: மஹாமணிமயே பீடேऽக்ஷராம்போருஹே
ஷட்கோணாகலித த்ரிகோண ரசநா - ஸத்கர்ணிகேऽமும் பஜே॥ 3

சக்ர - ப்ராஸ - ரஸால - கார்முக - கதா - ஸத்பீஜபூரத்விஜ
வ்ரீஹ்யக்ரோத்பலபாசபங்கஜகரம் சுண்டாக்ர - ஜாக்ரத்கடம்।
ஆச்லிஷ்டம் ப்ரியயா ஸரோஜகரயா ரத்நஸ்புரத்பூஷயா
மாணிக்யப்ரதிமம் மஹாகணபதிம் விஶ்வேஶ மாஶாஸ்மஹே॥ 4

தாநாம்ப: - பரிமேதுர - ப்ரஸ்ருமர - வ்யாலம்பி - ரோலம்பப்ருத்
ஸிந்தூராருண - கண்டமண்டல - யுகவ்யாஜாத் ப்ரசஸ்தித்வயம்।
த்ரைலோக்யேஷ்ட - விதாந - வர்ண - ஸுபகம் ய: பத்மராகோபமம்
தத்தே ஸஶ்ரியமாதநோது ஸததம் தேவோ கணாநாம் பதி:॥ 5

ப்ராம்யந் - மந்தர - கூர்ணநா - பரவச - க்ஷீராப்த்தி - வீசிச்சடா
ஸச்சாயாஶ் - சலசாமர - வ்யதிகர - ஶ்ரீகர்வ - ஸர்வங்கஷா:।
திக்காந்தா - கநஸார - சந்தந - ரஸாஸாரா: ச்ரயந்தாம் மந:
ஸ்வச்ச்சந்த - ப்ரஸர - ப்ரலிப்த - வியதோ ஹேரம்ப - தந்தத்விஷ:॥ 6

முக்தாஜால - கரம்பித - ப்ரவிகஸந் - மாணிக்ய - புஞ்ஜச்சடா-
காந்தா: கம்பு - கதம்ப - சும்பித - கநாபோக - ப்ரவாளோபமா:।
ஜ்யோத்ஸ்நாபூர - தரங்க - மந்தரதரத் - ஸந்த்யாவயஸ்யாஶ்சிரம்
ஹேரம்பஸ்ய ஜயந்தி தந்திகிரணாகீர்ணா ஶரீரத்விஷ:॥

ஶுண்டாக்ராகலிதேந ஹேமகலஶேநாவர்ஜிதேந க்ஷரந்-
நாநாரத்ந - சயேந ஸாதகஜநாந் ஸம்பாவயந் கோடிஶ:।
தாநாமோத - விநோதலுப்த்த - மதுப - ப்ரோத்ஸாரணா விர்பவத்-
கர்ணாந்தோளந - கேலநோ விஜயதே தேவோ கணக்ராமணீ:॥ 8

ஹேரம்பம் ப்ரணமாமி யஸ்ய புரத: சாண்டில்ய - மூலே ஶ்ரியா
பிப்ப்ரத்யாऽம்புருஹே ஸமம் மதுரிபுஸ் தே ஶங்கசக்ரே வஹந்।
ந்யக்ரோதஸ்ய தலே ஸஹாத்ரிஸுதயா ஶம்புஸ் ததாதக்ஷிணே
பிப்ராணா: பரஶும் த்ரிஶூலமிதயா பாஶாங்குஶாப்யாம் ஶுபம்॥ 9

பஶ்சாத் பிப்பல மாஶ்ரிதோ ரதிபதிர் தேவஸ்ய ரத்யோத்பலே
பிப்ப்ரத்யா ஸமமைக்ஷவம் தநுரிஷூந் பௌஷ்பாந் வஹந் பஞ்ச ச।
வாமே சக்ரகதாதர: ஸ பகவாந் க்ரோட: ப்ரியங்கோஸ் தலே
ஹஸ்தோத்யச் சுகசாலி - மஞ்ஜரிகயா தேவ்யா தரண்யா ஸஹ ॥ 10

ஷட்கோணாஶ்ரிஷு ஷட்ஸு ஷட் கஜமுகா: பாஶாங்குஶாபீவராந்
பிப்ராணா: ப்ரமதாஸகா: ப்ருதுமஹாஶோணாஶ்மபுஞ்ஜ த்விஷ:।
ஆமோத: புரத: ப்ரமோத ஸுமுகௌ தம் சாபிதோ துர்முக:
பஶ்சாத் பார்ஶ்வகதோஸ்ய விக்ந இதி யோ யோ விக்நகர்த்தேதி ச ॥ 11

ஆமோதாதிகணேஶ்வரப்ரியதமாஸ் தத்ரைவ நித்யம் ஸ்த்திதா:
காந்தாஶ்லேஷரஸஜ்ஞமந்த்தரருஶ: ஸித்திஸ் ஸம்ருத்திஸ் தத:।
காந்திர் யா மதநாவதீத்யபி ததா கல்பேஷு யா கீயதே
ஸாந்யா யாபி மதத்ரவா ததபரா த்ராவிண்யமூ: பூஜிதா: ॥ 12

ஆஶ்லிஷ்டௌ வஸுதேத்யதோ வஸுமதீ தாப்ப்யாம் ஸிதாலோஹிதௌ
வர்ஷந்தௌ வஸு பார்ஶ்வயோர் விலஸதஸ் தௌ ஶங்கபத்மௌ நிதீ।
அங்காந்யந்வத மாதரஶ்ச பரித: ஶக்ராதயோப்ஜாஶ்ரயா:
தத்பாஹ்யே குலிஶாதய: பரிபதத் - காலாநல - ஜ்யோதிஷ: ॥ 13

இத்த்தம் விஷ்ணு ஶிவாதிதத்வதநவே ஸ்ரீவக்ரதுண்டாய ஹூம்-
காராக்ஷிப்த ஸமஸ்த தைத்யப்ருதநா வ்ராதாய தீப்த த்விஷே।
ஆநந்தைக ரஸாவபோத லஹரீ வித்த்வஸ்த ஸர்வோர்மயே
ஸர்வத்ர ப்ரதமாந முக்த மஹஸே தஸ்மை பரஸ்மை நம: ॥ 14

ஸேவா ஹேவாகி தேவாஸுர நர நிகரஸ்ப்பார கோடீரகோடீ
கோடிவ்யாடீகமாந த்யுமணிஸமமணி ஶ்ரேணியா வேணிகாநாம்।
ராஜந் நீராஜநஸ்ரீ ஸகசரணநகத்யோத வித்யோதமாந:
ஶ்ரேய: ஸ்தேய: ஸ தேயாந் மம விமலத்ருசா பந்துரம் ஸிந்த்துராஸ்ய: ॥ 15

ஸ்ரீமத் ராகவசைதந்ய க்ருதாம் கணபதி ஸ்துதிம்।
படதாம் ச்ரத்தயா நித்யம் வச்யம் விச்வம் ந ஸம்சய: ॥ 16

*பலவிதமாக மனம் கெட்டலைந்து பெற்ற கெட்ட விஷய வாஸனைகளை அறவே அகற்றி மாசகன்ற உள்ளத்தில் உண்டான அமுதப் பெருக்கில் கரைந்துத் தியானத்தில் அமர்ந்து-ள்ளவர்களும் மேலான பரம தத்துவத்தில் உள்ள மடங்கிப்போக முறையறிந்தவர்களுமான யோகிகளுக்கு உள்ளத்து அமைதி பெறுமிடமானவரும், ஆனந்தத்தில் மிதக்கிற பேரறிவின் இனிய மணம் கமழுகிற ஒளி*

*நிரம்பியவரும் யானை முகத்தானாகத் தோன்றியவருமான அந்தப் பெருமானை வழிபடுகிறோம். (1)*

*ப்ரணவம் லக்ஷ்மீபிஜம், சக்திபீஜம் காமபீஜம் பூமிபீஜம் கம் என்ற தன் பீஜம் இவற்றைச் சேர்த்து வர! (சிறந்தவரே) வரத விரும்பியதை அளிப்பவரே) என விளித்து கணபதியான உமக்கு நமஸ்காரம் என்று சொல்லி எல்லா மக்களையும் என் வசப்படுத்துவீர் என வேண்டி ஸ்வாஹா முதலியவற்றைச் சொல்லி விருப்பம் மிகுந்து துயருற்று நிற்பவனால் வேண்டப்பெறுகிற கணாதிபதிக்கு நமஸ்காரம் (ஓம் ஸ்ரீம் ஹ்ரீம் கலீம் க்லௌம் கம் கணபதயே வர வரத ஸர்வஜனம் மே வசமாநய ஸ்வாஹா என்ற மந்த்ரத்தை இது விளக்குகிறது).*

*வானத்தில் பரவியுள்ள மேகக் கூட்டங்களைத் தொடும் அளவிற்கு உயர்ந்துள்ள அலைவரிசையுடன் கூடிய கரும்புச்சாற்றாலான கடலில், சிந்தாமணித் தீவில் நறுமணத்தால் மனத்தைக் கவரும் பூக்கள் நிறைந்த கற்பக உத்யானவனத்தில், கற்பக விருக்ஷத்தின் அடியில், இரத்தின-மயமான மண்டபத்திலுள்ள மணிமயமான பீடத்தில், மாத்ருகா அக்ஷரங்கள் நிறைந்த எட்டு இதழ் கொண்ட தாமரைப் பூவின் நடுவில் இருக்கும் மொட்டிலுள்ள ஆறு கோணத்துக்கும் மூன்று கோணத்துக்கும் நடுவில் கோவில் கொண்டிருக்கும் மஹா கணபதியை ஸேவிக்கிறேன். (3)*

*சக்கிரம், சூலம், கரும்புவில், கதை, மாதுளம்பழம், தந்தம், நெற்கதிர், நீலோத்பலம், பாசம், தாமரைமலர் இவற்றை (பத்துக் கைகளில்) தரிப்பவரும், துதிக்கையில் (ரத்தினங்கள் நிறைந்த தங்கக்) குடத்தைத் தாங்கி நிற்பவரும், தாமரைப் பூவைக் கையில் கொண்டவளும் ஒளிமிக்க ரத்தினா-பரணங்களைப் பூண்டவளுமான மனைவி வல்லபையினால் ஆலிங்கனம் செய்யப்பெற்றவரும், மாணிக்கம் போலச் சிவந்த மேனியுடையவரும், சர்வேச்வரருமான மஹாகணபதியைத் துதிக்கிறோம். (4)*

*மதஜலப் பெருக்கினால் கூட்டமாக மொய்த்துக் கொண்டிருக்கும் கருநிறமுள்ள வண்டுகள் நிறைந்து, சிந்தூரம் போலச் சிவந்த அடிபணியும் அடியார்களுக்கு நல்வரங்கள் அனைத்தையும் தந்தருள்வதாக கரிய மையால் எழுதிய*

எழுத்துக்கள் அடங்கியவையுமான பத்மராகம்போன்று சிவந்த இரண்டு புகழ் பலகைகளைத் தாங்கி நிற்கிற மஹாகணபதி எப்பொழுதும் எல்லா விதமான ஐச்வர்யத்தையும் நமக்குத் தந்தருளவேண்டும். (சிவந்த கன்னத்தில் கருவண்டுகள், அகன்ற பலகையின் மேல் கரிய மையால் எழுதிய விளம்பர எழுத்துகளைப் போல் காண்கின்றன. விரும்பியதைத் தருவதே விளம்பரத்தின் பொருள்) (5)

அமுதத்திற்காகப் பாற்கடலை மந்தரமலையாகிய மத்தால் கடைந்தபோது மந்தரமலையின் இரு புறங்களிலும், வானளாவிப் பொங்கி எழுந்த வெண்ணிறமான பால் அலைகள் போலத் தோன்றுபவையும், இரு புறமும் மேலும் கீழுமாக வீசப்படுகிற வெண்சாமரங்களின் பெருமையைக் குலைக்கிறவையும், திசைகளாகிய பெண்களுக்குப் பச்சைக்கற்பூரம் சேர்ந்த சந்தனப்பூச்சாக இருப்பவையும், வானத்தை அளாவிய ஒளியுடையவையுமான மஹா கணபதியினுடைய தந்த ஒளிகள் என் உள்ளத்தில் குடி கொள்ள வேண்டும். (6)

முத்துக் கூட்டங்களுடன் கலந்து ப்ரகாசிக்கிற மாணிக்கமணிகளின் (சிவப்பு ரத்தினங்களின்) குவியல் போலவும், சங்குக் குவியலுடன் சேர்ந்து பரந்து கிடக்கும் பவழங்கள் போலவும், அலை போல் பாய்கிற வெண்ணிலாவுடன் கூடின ஸந்த்யாகாலம் போலும் ப்ரகாசிக்கிற மஹாகணபதியினுடைய தந்த சோபையுடன் கலந்து உடலொளிகள் எப்பொழுதும் சிறப்பாக விளங்குகின்றன. (7)

துதிக்கையின் நுனியால் தாங்கப்பெற்ற தங்கக் குடத்திலிருந்து பொங்கி வழிகிற முத்து மாணிக்கம் முதலிய பலவிதமான ரத்தினக் குவியல்களால், தம்மை வழிபடுகிற அடியார்களை எல்லா விதமான ஐச்வர்யங்களும் நிறைந்தவர்களாகச் செய்பவரும், மதஜலத்தின் மணத்தில் மயங்கி வட்டமிடும் வண்டுக் கூட்டத்தை விரட்டுவதற்காக வேடிக்கையாகக் காதுகளை அசைத்துக் கொண்டிருப்பவரும், பக்தர் கூட்டங்களை நல்வழி நடத்துகிறவருமான ஸ்ரீமஹாகணபதி மிகச் சிறப்புடன் ப்ரகாசிக்கிறார். (8)

மஹாகணபதிக்குக் கிழக்கில் பில்வமரத்தடியில், தாமரைப் பூக்களைக் கையில் தாங்கி நிற்கும் லக்ஷ்மிதேவியுடன் சங்கு

சக்கரங்களைத் தாங்கி நிற்கும் நாராயணனும், தென்திசையில் ஆலமரத்தடியில் பாசமும் அங்குசமும் கையில் தாங்கிய பார்வதிதேவியுடன் பரசுவையும் த்ரிசூலத்தையும் தாங்கிய பரமேச்வரனும் இருக்கிறார்கள். இந்த மஹாகணபதியை நமஸ்கரிக்கிறேன். (9)

மஹாகணபதிக்கு மேற்கில் அரச மரத்தின் அடியில் நீலோத்பலப் பூக்களைக் கையில் ஏந்திய ரதிதேவியுடன் கரும்பு வில்லையும் அரவிந்தம் முதலிய ஐந்து புஷ்பங்களான பாணங்களையும் தாங்கிய மன்மதனும், வடக்கு திசையில் ஞாழல் மரத்தின் அடியில், நெற்கதிரையும் பச்சைக் கிளியையும் கைகளில் தாங்கிய பூமிதேவியுடன் சக்கரத்தையும் கதையையும் தாங்கிய வராஹ மூர்த்தியும் கோயில் கொண்டிருக்கிறார்கள். (10)

மஹாகணபதியினுடைய பீடத் தாமரைப்பூவின் நடுவிலுள்ள மொட்டில் ஆறு கோணங்களில் பாசம் அங்குசம் என்ற ஆயுதங்களையும் அபயம் வரதம் என்ற முத்திரைகளையும் தாங்கிய யானை முகத்தையுடையவர்களும் பத்மராகம் போலச் சிவந்தவர்களும், மனைவியருடன் கூடியவர்களுமான ஆறு கணேச்வரர்கள் முன்னும் பின்னுமாக ஆமோதரும் ப்ரமோதரும் ஸுமுகரும் துர்முகரும் விக்நரும் விக்னகர்தாவும் கணபதியைச் சூழ்ந்து நிற்கின்றனர். (12)

கணவர்களின் ஆலிங்கனத்தால் மகிழ்ந்து அன்பை வெளியிடுகிற பார்வையுள்ளவர்களும், கல்பநூல்களில் வர்ணிக்கப் பெறுகிறவர்களுமான ஸித்தி, ஸமிருத்தி, காந்தி, மதனாவதி, மதத்ரவா, த்ராவிணீ என்ற பெயருள்ள ஆமோதன் முதலிய கணேச்வரர்களின் மனைவியர் அருகில் இருந்து கொண்டு மஹாகணபதியை உபாஸிக்கின்றனர்.

பீடத்தின் நடுவிலிருக்கும் ஷட்கோணத்தின் இரண்டு பக்கங்களிலும் வஸுதை (வஸுதாரா) என்ற பார்யையுடன் கூடிய வெண்ணிறமுள்ள சங்கநிதியும் வஸுமதி என்ற பார்யையுடன் கூடிய சிவப்பு நிறமுள்ள பத்மநிதியும் செல்வத்தைப் பொழிந்துகொண்டு விளங்குகிறார்கள். அவர்களுக்கு வெளியில், ஹ்ருதயம் சிரஸ் சிகை கவசம் நேத்ரத்ரயம் அஸ்திரம் என்ற ஆறு அங்கங்களின் தேவதைகளும் சுற்றி ப்ராஹ்மீ முதலிய எட்டுமாதாக்களும் விளங்குகின்றனர். ஆறு கோணத்திற்கு வெளியில்

*தாமரைப்பூவிலுள்ள எட்டு இதழ்களிலும் இந்த்ரன் முதலிய எட்டு திக்பாலகர்களும், அவர்களுக்கு வெளிப்புறத்தில் அருகிலேயே ப்ரளயகாலத்து அக்கினிபோல் ஜ்வலிக்கிற இந்திராதி திக்பாலகர்களுடைய வஜ்ரம் முதலிய ஆயுதங்களும் விளங்குகின்றன. (ப்ராம்ஹீ, மாஹேச்வரீ, கௌமாரீ, வைஷ்ணவீ, வாராஹீ, மாஹேந்த்ரீ, சாமுண்டா, மஹாலக்ஷ்மீ என மாதாக்கள் 8) (13)*

*இங்ஙனம் நாராயணன் சிவன் முதலியவர்களின் தத்வத்தையே தமது உடலாகக் கொண்டவரும், ஸ்ரீவக்ரதுண்டர் என்ற திருநாமம் பூண்டவரும் தனது பிளிறலால் எல்லா அசுரப்படைகளையும் விரட்டியவரும். கோடிக்கணக்கான சூர்யர் போல அணுக முடியாத ஒளியுடன் கூடியவரும் அடியார்களைப் ப்ரம்மானந்தப் பெருக்கில் மூழ்கச் செய்து, அலைபோல் தொடர்ந்து ஏற்படும் பசி தாகம், சோகம், மோகம், பிறப்பு, இறப்பு என்ற ஆறு வகையான துன்பங்களை அகற்றுபவரும், கோடிக்கணக்கான சந்த்ரர் போல அழகிய குளிர்ந்த ஒளிகள் நிறைந்தவருமான பரம்பொருளான மஹாகணபதியை வணங்குகிறோம். (14)*

*ஸ்ரீ மஹாகணபதியை வழிபடப் போட்டியிட்டுக் கூடிய தேவரும் அசுரரும் மனிதருமான கோடிக்கணக்கானவர்களின் கிரீடங்களில் இழைத்துள்ள நவரத்தினங்களின் ஒளி திருவடிகளுக்குள் அலங்கார தீபஹாரத்தியில் காணும் தீபஜ்வாலை போலக் காணப்படுகிறது. அதற்கு இணையான சரணநகங்களின் சோபையுடன் கூடிய ஸ்ரீமஹாகணபதி தயை நிறைந்த நிர்மலமான அருட்பார்வையினால் எனக்கு எல்லாவிதமான நிலையான நலத்தையும் அருள வேண்டும்.*

நேர்முகமாகவும் மறைமுகமாகவும், இருபத்தெட்டு ஆறு என்ற எண்ணிக்கையுள்ள எழுத்துக்கள் அடங்கிய மந்திரங்களின் வரிசையுடன், பொருளின் அறிவைத் தெளிவாகத் தெரிவிக்கும் அழகிய சொல்நயம் அமைத்ததும், ஸ்ரீராகவ சைதன்யர் என்ற பரமஹம்ஸர் இயற்றியதுமான இந்த மஹாகணபதி ஸ்தோத்ரத்தை எப்பொழுதும் சிரத்தையுடன் படிக்கிற பக்தனுக்கு மூவுலகும் வசமாகும் என்பதில் ஐயமில்லை. (15)

—ஸ்ரீராகவ சைதன்யர் இயற்றியது

